

சென்று வணங்குமினே சேணுயர் வேங்கடத்தை
நின்றுவினை கெடுக்கும் நீர்மையால் — என்றும்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத்தானும்
அடிக்கமல மிட்டேத்து மங்கு.

(நான்முகன் திருவந்தாதி — 42)

பக்தர்களே! மிகவும் ஓங்கின சிகரத்தையுடைய திருமலையை சென்று வணங்குங்கள். அத்திருமலையானது தன் இயற்கைக் குணத்தால் பாவங்களைப் போக்குவதில் நிலை நின்றிருக்கும். அத்திருமலையில், பரிமளம்மிக்க தாமரையிற் பிறந்தவனான பிரமனும், முக்கண்ணனான சிவபிரானும் எக்காலத்தும் எம்பெருமானது திருவடிகளிலே தாமரைப் புஷ்பங்களை ஸமர்ப்பித்து துதித்துக் கொண்டிருப்பார்கள்.

# ஸப்தகிரி


ஜனவரி - 1990

தனிப்பிரதி ரூ. 1 — மலா 20

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 8


## உள்ளுறை


| | பக்கம் |
|---|---|
| பிரார்த்தனை | 5 |
| வைகுண்ட ஏகாதசியில் வடக்கு ... | 7 |
| தூப்புல் குல விளக்கும் வேயர் பயந்த விளக்கும் | 9 |
| பகர் அல்லைப் பகல்செய் திருவேங்கடம் .. | 11 |
| உதிரிப பூக்கள் ... | 13 |
| எந்நாட்டவர்க்கும் இறைவன் .. | 16 |
| வைகுந்த ஏகாதசி . | 17 |
| மார்கழித் திங்கள ... | 21 |
| வாழ்த்தும் வரங்கள் ... | 29 |
| பஞ்சவரதர் திருத்தலம் | 31 |
| சாளக்கிராமம் அடை நெஞ்சே! ... | 3 |
| ஸ்ரீ ராமஜென்ம பூமியின் சிறப்பு ... | 37 |
| திருவேங்கடம் | 39 |
| ஸ்ரீமத் பகவத் கீதையும் திருக்குறளும் ... | 41 |
| 1990-இல் உங்கள் இராசி பலன் ... | 45 |


### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : முத்துக்கவசத்தில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் — திருமலை

முதல் உள்அட்டை : திருமலையில் ஆந்திர மாநில அறநிலையத் துறை அமைச்சர்

2-வது உள்அட்டை . திருமலையில் புஷ்ப யாகம்

பின்னட்டை : புத்தாண்டு வாழ்த்துச் சித்திரம்.


சிறப்பாசிரியர்

திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியா

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ

துணையாசிரியர்

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ..

பிரதிகளுக்கு :
EDITOR,
“ Sapthagiri ”
T. T. Devasthanams,
TIRUPATI

# உங்களுடன ....

இருபதாம் நூற்றுண்டின் இறுதிக்கட்டத்தில் நின்று கொண்டிருக்கின்றேம். ஆம், இன்னும் பத்தாண்டுகள் சென்றுவிடின் இருபத்தியோராம் நூற்றுண்டினைத் தொட்டுவிடுவோம். காலவேகத்தின்முன் இப்பத்தாண்டுகள் ஒரு பெரிய கால இடைவெளியல்ல. காலத்தின் இடைவெளி குறுகக்குறுக, மனிதனுக்கும் மனிதப்பண்புகளுக்குமிடையே நிலவிவரும் இடைவெளி அதிகமாகிக் கொண்டிருப்பது ஒரு கசப்பான உண்மையாகும். இன்றைய மனிதனிடம் நிறைகளைவிட குறை களே அதிகமாக இருப்பதால், அந்நிறைகள்கூட நமக்கு மகிழ்ச்சியைத் தருவதில்லே. அதனுல்தான் சிறு குறைகள்கூட பூதாகாரமாக நமக்குப் புலப்படுகின்றன. அவற்றை நம்மிடமிருந்து களையவே அக்குறைகளின் பாதிப்புக்களை எண்ணிப் பார்த்தலே நமக்குச் சிறந்த தெளிவினை உண்டாக்கும் என்றே நம்புகிறேம்.

காலம் தந்திட்ட 'வரலாறு' என்பது ஒன்று நம்மிடையே இல்லாதிருந்தால் மனிதப் பண்பின் மாட்சிமையோ, மண்ணின் மாண்போ நமக்குப் புரிந்திருந்திருக்காது. வரலாறு நமது பெருமையினை மட்டுமன்றி, நமது குறைபாடுகளையும் அறிவுறுத்தி, நம்மை நாமே திருத்திக் கொள்ளும் ஒரு பாடமாக நமக்கு விளங்குகிறது. கடந்த கால அனுபவங்கள் யாவும், எதிர்காலத்தில் ஓர் அமைதியான, வளமான வளர்ச்சிக்கு வித்திட, நிகழ் காலத்தில் நம்மை நாமே சீர்தூக்கிப் பார்த்திட வழிவகுக்கும்.

மனிதன் முழு நம்பிக்கையுடனும், சில எதிர்பார்ப்புகளுடனும்தான் தன் வாழ்க்கையை நடத்துகின்றுன்; அனுபவிக்கின்றுன. அவனுடைய வாழ்க்கையின் இறுதி இலட்சியம் மனயமைதியேயாகும். இன்றைய மனிதன் உலகா யுத ஆசைகளை தீர்த்துக் கொண்டபின்தான், அவன் மனம் அமைதியை நாடுகின்றது, இறை வழிபாட்டில் ஈடுபடுகின்றது. ஆசைகள பெருகப்பெருக அமைதியோ, வெற்றியோ அவனுக்குக் கானல் நீராகி விடுகின்றது. ஆசைகள் நியாயமானவை களாக, தர்ம சிந்தனையில் அமைந்தவைவாக இருந்திடின் காலமும் அவனுக்கு உதவிக்கரம் நீட்டுகின்றது. நேற்றைய நாளை இன்று இல்லே. இன்றைய நாளை நாளை ஆகாது. இதுவே காலத்தின் கொள்கை. மாற்றங்களே அதன் பெருமை. மாற்றங் கள் மாசுபடுவது மனிதனுல்தான் என்பது வரலாறு கூறும் செய்தியாகும். கற்கால மனிதனின் காட்டு வாழ்க்கையினைக் காண்பித்ததும், கொடுங்கோலரின் ஆட்சியினைக் கோடிட்டுக் காட்டியதும், புரவலர்களின் புனித ஆட்சியினைப் புடம் போட்டுப் பார்க்க வைத்ததும், இயற்கைத் தூளியில் மனித இனத்தைத் தாலாட்டியதும், தன் சீற்றத்தால் அவனை அலேகழித்ததும் யாவும் காலத்தின் விந்தைப் போக்குகளாகும். இவை மனித சமுதாயத்திற்குக் காட்டிட்ட எச்சரிக்கையுமாகும்.

ஆட்சிகள் கை மாறினுலும், காட்சிகள் பலமாறினுலும் மனித சிந்தனையின-மனதினை உயர்ந்த இடத்தில் என் றும் வைத்திருந்தால் அவன் இனம் மாண்புறவே செய்யும். ஆட்சிகள் அவலமாகும்போது தனிமனிதப் பண்புகள்கூட ஆபாசப்பட்டிருந்தால் இம்மண்ணில் இதிஹாஸங்களும், புராணங்களும் எழுதப்பட்டிருக்காது; ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றிருக்க மாட்டார்கள்; ஆசார்யர்களும், அடியார்களும், சமயத்தலேவர்களும் நம்மிடையே நடமாடியிருக்கமாட்டார்கள்; இந்து சமயம்தான தழைத்திருக்காது. இந்து சமயம் எனும் பெரும் மாளிகை இம்மண்ணின் மைந்தர்களின் தர்ம சிந்தனையினமீதும் அற வாழ்க்கையின்மீதும்தான் எழுப்பப்பட்டுள்ளது. இந்து சமயத்திற்கும், சமுதாயத்திற்கும் தீங்கு விளைவித்திட அவ்வப்போது சில காளான்கள் முளைக்கத்தான் செய்கின் றன. ஆனுல் அவற்றை காலம் வளரவிடவில்லே. அவை காலே மழையில் முளைத்து மாலே வெய்யிலில் வாடிவிடுவன. அவற்றை இந்த மண் என்றும் பொருட்படுத்தியதில்லே. எதிர்ப்புகளிடையே, எதிாப்புகளூடே வளர்ந்த சமயம் இந்து சமயம். எந்தவிதமான இயக்கங்களின் பின்னணியிலோ, அரசுகளின பலத்திலோ இந்து மதம் வளர்ந்திடவில்லே, பாது காக்கப்படவில்லே. தனி இநது ஒருவனின் மன உறுதியில்தான் அதன் அடித்தளம் போடபபட்டுள்ளது. அவ்மன உறுதி யானது பரந்த மனப்பான்மை, சகிப்புத தன்மை, இரக்கம், தியாகம், அறநெறி எனும் மனித இனத்திற்கே உரித்தான நற்பண்புகளையே உரமாகக் கொண்டது. பாவங்கள் மன்னிக்கப்படாமல், பாவங்கள் உணரப்பட்டு உயர்ந்த மதம அது. வெறி யூட்டப்பட்டு வளர்க்கப்பட்ட நச்சு மரம அல்ல அது. நெறிக்குட்பட்டு வளர்ந்த ஆலமரம் அது. அம்மரத்தின் கிளைகளை வெட்டி விலேயாக்கிடும் 'பகுத்தறிவுக் களஞ்சியங்களால்' இந்து மதத்திற்கு என்றும் கேடு வாராது. நன்னெறி பிறழ்ந்து, சமயப் பற்று இழந்து, 'கொண்டதே கோலம் கண்டதே காட்சி' எனத் திரிந்து, உணவுக்கும் உடைக்கு மட்டுமே அலேந்து, உறக்கமே முக்கியமாகக் கொண்டு விளங்கிடும் இந்துக்களே அவ்ஆலமரத்தின் வேர்ப்பூச்சிகளாகும். இது போன்ற தனிமனிதர் களின் போக்கு திருத்தப்பட வேண்டுமாயின், சமய விழிப்புணர்ச்சி காலங்கடந்து தோன்றிடாமல், பள்ளி பருவத்திருந்தே மனதிலும், சிந்தையிலும், பழக்க வழக்கங்களிலும் இந்து சமய உணர்வு எனும் விதையினைத் தூவிட, சமுதாயத்தில் முக்கிய பங்கேற்கும் பெற்றேர்களும், ஆசிரியர்களும், சமயத் தலேவர்களும் பொறுப்பு, தன்னம்பிக்கை, தியாகம், பெரு முயற்சி ஆகியற்றை உரமாகக் கொண்டு செயல்பட்டால், அவ்ஆல மரம் மேலும் பல கிளைகளுடன் தழைத்தோங்கவே செய் யும். ஆக்கப்பூர்வமான இவ் அரும்பணியை திருவேங்கடவன் திருவருளால் இத்தருணத்திருந்தே துவக்குவதை, மலர்ந்திட்ட இப்புத்தாண்டின் புதுக்கொள்கையாக நாம் ஏற்றுக்கொள்வோம்.

# செய்திச் சுருக்கம்

திருமலையில் பாபநாசம் செல்லும் வழியில் உள்ள மலைக்குன்றுகளின் மீது, 2 மெகாவாட் மின் உற்பத்தி செய்யும் மின் நிலையம் ஒன்று செயற் படும் வகையில் ரூ. 3.43 கோடி செலவில் காற்றாலைஒன்று விரைவில் நிறுவப்படும்.

ஃ ஃ ஃ

இவ்வாண்டு முதற்கொண்டு திரு மலையில் தி. தி. தே. நித்ய அன்ன தான திட்டத்தின்கீழ் நாள் ஒன்றிற்கு 20,000 யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கிடும் வகையில் முயற்சி கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

ஃ ஃ ஃ

வைகுண்ட துவாதசியன்று, திரு மலைக் கோயிலில் உள்ள வைகுண்ட வாயிலினை 500 கி. கி. எடை கொண்ட பலவண்ண மலர்களால் அழகுபடுத்துவதென்று மேலாண்மை தீர்மானித்துள்ளது.

ஃ ஃ ஃ

25-11-89 முதல் 3-12-89 வரை திருப்பதியை அடுத்துள்ள திருச்சா னூர் ஸ்ரீ பத்மாவதித் தாயார் திருக் கோயிலின் வருடாநதிர பிரம்மோத் சவம் மிகச்சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. இதுபோது, தென்னாட்டி லிருந்து, குறிப்பாக தமிழகத்தி லிருந்து ஆயிரக்கணக்கான பக்தர் கள் இப்பிரம்மோத்சவத்தைக் கண்டு களித்தனர். இப்பிரம்மோத்சவ நாட் களின்போது மாலை நேரங்களில் நடைபெற்ற ஊஞ்சல் சேவை கருத் துக்கும் கண்களுக்கும் பக்தி விருந் தாக அமைந்தது. இத்திருவிழாவின் போது அன்னமாச்சார்யா திட்டக் குழுவைச் சார்ந்த இசைக் கலைஞர் களின் இன்னிசைக் கச்சேரிகளும், இசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

ஃ ஃ ஃ

திருமலையில் பிரமுகர்கள் :

கர்னாடக மாநில ஆளுநர் திரு. பி. வெங்கட சுப்பையா, ஆந்திர மாநில அரசு நிதி அமைச்சர் கே. ரோசய்யா, வேளாண்மைத்துறை அமைச்சர் திரு. என். ஜனார்தனம் ரெட்டி, அறநிலையத்துறை அமைச்சர் திரு. மாகண்ட்டி ரவீந்தர் நாத் சௌத்ரி, தொழிற் கல்வி அமைச்சர் திரு. கே. ஈஸ்வரகுமார், பஞ்சாயத் ராஜ் அமைச்சர். திரு. ஆர். செங்கா ரெட்டி மற்றும் பாராளுமன்ற உறுப் பினர்கள் திருமதி. ஜமுனாரமணராவ், திரு. வை. எஸ். ராஜசேகர் ரெட்டி மற்றும் மத்திய செய்தி ஒலி பரப்புக் கழக அமைச்சர் திரு. பி. உபேந்திரா ஆகியோர் கடந்த மாதம் பல்வேறு நாட்களின் போது திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித் தனர்.

ஃ ஃ ஃ

வைஷ்ணவ மாநாடு :

சென்னை, ஸ்ரீ வைஷ்ணவ மகா சங்கத்தின் ஆதரவில் 64-ஆவது வரு டாந்திர வைஷ்ணவ மாநாடு சென்னை யில் ஸ்ரீ உப்பத்தூர் ஆழ்வார் செட்டி யாரின் ராமானுஜ. கோட்டம் அரங் கல் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இம்மாநாடு 'ஸ்ரீ வைஷ்ணவ சுதர் ஸனம்' இதழ் ஆசிரியர் திரு. எஸ். கிருஷ்ண சுவாமி ஐயங்கார் அவர் களால் துவக்கி வைக்கப்பட்டது. இம் மாநாட்டிற்கு 'திண்டுக்கல் தோட்டி சுவாமி' திரு. ராமானுஜ சுவாமிகள் தலைமை வகித்தார். இதுபோது வைஷ்ணவத்தொண்டு பலவாறு புரிந் திட்ட திரு. பெருமாள் நாயுடு அவர் களின் திருவுருவப்படத்தினைத்தமிழக அரசு நிருவாக நீதிக் குழுவின் உறுப் பினர் நீதிபதி திரு. செங்கோட்டு வேலன் அவர்கள் திறந்து வைத்தார். மகா சங்கத்தைச் சார்ந்த திரு. டி. எம். புருஷோத்தம ராமானுஜதாஸர் அவர்கள், அவருடைய சதாபிஷேகத் தினை ஒட்டி, பாராட்டப்பட்டார்.

இதுபோது 59-வது வருடாந்திர ஸ்ரீ வைஷ்ணவ மகளிர் மாநாடும் 27-12-89 மற்றும் 28-12-89 தேதி களில் நடைபெற்றது. இம்மாநாடு கலைமாமணி டாக்டர். சேலம். எஸ். ஜெயலட்சுமி அவர்களால் துவக்கப் பட, திருமதி. எஸ். அமிருதவல்லி, (கந்தசாமி கல்லூரி, கடலூர்) அவர் கள் மாநாட்டிற்குத் தலைமை வகித் தார். திரு. நல்லி. சி. குப்பு சுவாமி செட்டி அவர்களால், சங்கத்தின் சார்பில் 15 வைஷ்ணவ தமிழ் அறி ஞர்களுக்கு 'ஸ்ரீவைஷ்ணவச்செல்வர்' எனும் சிறப்புப் பெயர்கள் வழங்கப் பட்டன. மேலும் பேராசிரியர் டாக் டர். என். சுப்பு ரெட்டியார், திரு. உலகநாதன் பிள்ளை, திரு. தாமோ தரன், திரு. கரந்தை தாமோதரன் ஆகியோர்கள், அவர்கள்தம் வைஷ் ணவ இலக்கிய நூல்கள் அண்மையில் வெளியானது முன்னிட்டு, கௌர விக்கப்பட்டார்கள்.

செய்தி: ஸ்ரீ வைஷ்ணவ மகாசங்கம், சென்னை.



# பிரார்த்தனை

பிரார்த்தனை என்னும் நெறி ஒரு மதத்திற்குத்தான் உரியது, மற்றொரு மதத்திற்கு உரியதல்ல என்று பாகுபடுத்த முடியாது. சமயக் கோட்பாடுகளை சரியாக உருவாக்காத சமயங்களிலும் பிரார்த்தனை இடம் பெற்றிருக்கிறது. கடவுளே உலகமாகத் தோன்றிக் கொண்டிருக்கிறார் என்று சொல்லும் அத்துவைத மதத்திலும் அது அமைந்திருக்கிறது. மனிதனுடைய இயல்பிலேயே அது அமைந்திருக்கிறது என்று இயம்புவது முற்றிலும் பொருத்தமுடையதாகும். குழந்தை ஒன்று தனது தாயின் உதவியை நாடி அழுவது போன்று, மனிதன் தன்னிலும் மிக்கதொரு பொருளிடத்திலிருந்து அல்லது சக்தியினிடத்திலிருந்து உதவியைப் பரிந்து வேண்டுகின்றான். தனனுடைய தனி முயற்சியும் ஆற்றலும் தனக்குப் போதமாட்டாவென்று மனிதன் நன்கு உணர்கிறான். அறிவிலும், ஆற்றலிலும் தன்னிலும் மிக்கதொன்று இயற்கையில் ஊடுருவியோ அல்லது இயற்கைக்கு அப்பாற்பட்டோ இருக்கின்றது என்னும் நம்பிக்கை மனிதனிடத்து உறுதி பெற்றிருக்கிறது. அப்பெரிய பொருளோடு தொடர்பு பூணவும், அதன் உதவியைப்பெறவும் அவன் அவாவுகிறான். அங்ஙனம் மேலான ஒன்றன் துணையை நாடியிருப்பதற்குப் "பிரார்த்தனை" என்று பெயர். பிரார்த்தனை பண்ணும் பாங்கு இயல்பாகவே மனிதனுக்கு உண்டாகிறது. பிறர் செய்வதைப் பார்த்தும் அது அவனுக்கு அமைவதுண்டு. பிரார்த்தனை பண்ணும் பாங்கு எவ்விதத்தில் வந்து அமைந்தாலும், தனது நல்வாழ்வுக்கு அது முற்றிலும் இன்றியமையாதது என்று மனிதன் உணர்கிறான்.

திரு. ச. தனசேகரன்,
மதுரை.

மனிதன் செய்யும் பிரார்த்தனை என்னும் சீரிய செயலை விளக்குதற்குப் பல சொற்கள் வழக்கத்தில் வந்து அமைந்துள்ளன. அவை கடம், போற்றுதல், ஏத்துதல், வணங்குதல், வழிபடுதல், வேண்டுதல், தொழுதல், கோரிக்கொள்ளுதல் போன்றனவாகும். மனிதன் செய்கின்ற ஆன்ம சாதனங்களுள் பிரார்த்தனை ஒன்றே வலிவு மிக வாய்க்கப் பெற்றது என்பது ஆன்றோர் துணிபு. அதை முறையாகச் செய்கின்றவனுக்கு நாடியவெல்லாம் கைகூடும் என்பர். அதன் அடிப்படைத் தத்துவத்தை உள்ளபடி அறிந்து கொள்பவரே அதை ஒழுங்காகச் செய்ய முடியும். உடல் வளர்ச்சிக்கு உணவு பயன்படுவது போன்று உள்ளத்தின் எழுசசிக்கு இறைவணக்கம் பெரிதும் உதவுகிறது.

மனம் உடையவன் மனிதன். மனதில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஓரும் தன்மை ஒரு பகுதி; உணரும் தன்மை மற்றொரு பகுதி. ஓர்தல் வாயிலாகவும், உணர்தல் வாயிலாகவும் மனிதன் தெய்வத்

## சொர்க்கமும், நரகமும்

சொர்க்கத்துக்கும் நரகத்துக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்பதை ஒருவர் நேரில் பார்த்து வந்து சொன்னாராம்.

நரகத்தில் ஒரு பெரிய அண்டாவில் உணவு இருந்தது. ஒவ்வொருவருக்கும் மிக (நீண்ட) நீளமான கைப்பிடியுள்ள ஒரு கரண்டி கொடுக்கப்பட்டிருந்தது. மொள்ளலாம், சாப்பிட முடியாது. கையை மடித்துக் கரண்டியை வாயில் வைப்பதற்குள் உணவு சிந்திப் போய்விடும். எல்லோரும் பசியால் துடித்தார்கள்.

சொர்க்கத்திலும் அதே அண்டா, அதே கரண்டி தான். ஆனால் எதிரும் புதிருமாக நின்று கொண்டு அவன் மொண்டு இவனுக்கு ஊட்டுவான். இவன் மொண்டு அவனுக்கு ஊட்டுவான். எல்லோரும் வயிறு நிறையச் சாப்பிட்டார்கள்.

நன்றி: நல்ல சிந்தனைகள்.

தகவல்: திருமதி. கமலவேணி தனபதி-திருச்சிராப்பள்ளி.

தோடு இணக்கம் கொள்ளுங்கால், அது "பிரார்த்தனை" என்னும் பெயர் பெறுகிறது. தான் அடைய விரும்புவதைப் பிரார்த்தனையின் வாயிலாக மனிதன் தெய்வத்திடமிருந்து ஏற்க முயலுகிறான்.

ஏதேனும் ஒரு விதத்தில் யாதானும் ஒரு சக்தியினிடத்து மனிதனுடைய பிரார்த்தனையாண்டும் செலுத்தப்பட்டு வருகிறது. அத்துணைவிதப் பிரார்த்தனைகளையெல்லாம் நான்கு வகைத் தலைப்பின் கீழ் கொண்டு வரலாம். ஒன்று பிணியை போக்குவதற்காக தெய்வத்திடம் புரியும் பிரார்த்தனை. இரண்டாவது மண்ணுலக வாழ்க்கைக்கு இன்றியமையாதவைகளைக் குறித்து இறைவனிடம் வேண்டுகின்ற பிரார்த்தனை. இந்த இரண்டு படிகளிலும் உள்ள பிரார்த்தனை கடவுளோடு ஒப்பந்தம் பண்ணுகிற பாங்கில் செய்து வருகிறவர்களும் உளர். தங்கள் துன்பத்தை அகற்றி வைத்தல், அதற்குக் கைம்மாறாகக் கடவுளுக்கு ஏதேனும் கைங்கர்யம பண்ணி வைக்க அவர்கள் முடிவு கட்டுகின்றனர். தாங்கள் விரும்புகின்ற பொருளையும், போகத்தையும் தெய்வம் தங்களுக்கு நல்கியருளினால் அதைக் குறித்து நன்றி செலுத்துகிற பாங்கில் ஏதாவது பிரதியுபகாரம் தெய்வத்துக்கோ அல்லது சிறு தெய்வங்களுக்கு செய்து வைக்க தீர்மானிக்கின்றனர். இதற்கு "காமியப் பிரார்த்தனை" என்று பெயர். கோரிக்கை என்றும் கூறுவார்கள். காமியப் பிரார்த்தனை பண்ணுகின்றவர்களாகவே உலகில் பெரும்பான்மையோர் இருக்கின்றனர்.

நன்னெறியைக் கடைப்பிடிக்கின்றவர்கள் நல்வாழ்வுக்கு ஏதுவாகிய ஞானமும் பக்தியும் தங்களுக்கு அதிகரித்தல் பொருட்டு தெய்வத்திடம் பிரார்த்தனை பண்ணுகின்றார்கள். இது மூன்றாவதுவகையாகும். மெய்ப்பொருளாகிய கடவுளை ஏதேனும் ஒரு விதத்தில் சுவானுபூதியில் உணர்ந்தவர்கள் செய்யும் பிரார்த்தனை. இது பிரார்த்தனைகளுள் தலையாயது. தங்களுக்காக என்றும் எதையும் விண்ணப்பம் செய்கின்ற பாங்கில் அவர்களுடைய பிரார்த்தனை அமைவதில்லை. மெய்ப்பொருளின் பெருமைகளைத் தெளிவுபட விளக்குதல் பிரார்த்தனையின் முக்கிய பகுதியாகும். கடவுளின் பெருமையை ஓயாமல் எண்ணியெண்ணி, அவர்களுடைய எண்ணமே கடவுளின் மயமாய் மாறியமைந்து விடுகிறது. எண்ணத்தை அங்ஙனம் கடவுளிடம் விடுவதைப் பிரார்த்தனை என்று ஞானிகள் நம்புகின்றனர். இங்ஙனம் இது இறைவனை சுவானுபூதியில் உணர்ந்தவர்கள் செய்யும் பிரார்த்தனையாகும்.

மனிதன் இறைவனை வழிபடுவது பற்றிப் பல பாடல்கள் நமது இலக்கியத்தில் காணப்படுகின்றன. அவற்றில்,

"அவர் அவர் தாம் தாம் அறிந்தவாறு ஏத்தி
இவர் இவர் எம்பொருமான் என்று சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர்; உலகளந்த
மூர்த்தி உருவே முதல்"

எனப் பொய்கையாழ்வார் முதல் திருவந்தாதி 14ஆம் பாட்டில் கூறுதலும், மற்றும் இதற்கும் முற்பட்டதெனக் கருதக்கூடிய,

"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புருத் துறந்த மரம் சோர் மாடத்து
எழுது அணி கடவுள் போகலின்"

என்ற அகப்பாட்டின் (அகநானூறு 167, 13-15 வரி) கூற்றும் இச்செய்திக்கு அரண் செய்யும்.



# வைகுண்ட ஏகாதசியில் வடக்கு



மக்கள் தங்களுக்கெல்லாம்மேலாக ஒரு சக்தி இருப்பதாக அறிந்து கொண்டு அதனை வழிபட்டு வந்தனர். எத்துணைத் துன்பத்தில் பட்டுழன்றாலும்வாழ்வில்சில நாட்களாவது அனைவரும் ஒரு சேர இன்பத்தில் திளைக்க வேண்டும் என்ற உள்ளத்து உணர்வே உலகில் விழாக்கள் தோன்ற வழி காட்டியாய் அமைந்தது. எனவே, 'மக்களின் வாழ்வில் சலிப்பினைப் போக்கி இன்பமும் மலர்ச்சியும், புத்துணர்ச்சியுமூட்டுவது விழாவாகும். இவ்விழா பாடல்போல் கதை சொல்வது போல் ஒரேயொரு செயல்பற்றிச் சொல்வது அல்ல; மாறாக அது, பல மரபுத் தொகுதிகளை உள்ளடக்கியது ஆகும். இவை சமயச்சார்பு கொண்டனவாக இருந்தாலும் திருவிழாக்களைப்பற்றிய ஆய்வுதான் நாட்டுப்புற இயலாய்வுக்கு மிகப் பொருத்தமானது என்று கூறுவார் கார்லீகிரான் என்னும் புகழ்பெற்ற நாட்டுப்புற வியலறிஞர்.

இத்தகைய சமயச் சார்புடைய விழாக்களில் ஒன்றே வைகுண்ட ஏகாதசி. இதனை மோட்ச ஏகாதசி, சொர்க்க வாசல்ஏகாதசி, முக்கோடி ஏகாதசி என்று எல்லாம் அழைப்பர். இங்கு இவ்வைகுண்ட ஏகாதசியில் வடக்குத்திசை பெறும் இடம், அதன் நோக்கம், வழிபாடு அல்லது பிற சடங்கு முறைகளின் தாக்கம் ஆகியவை கொண்டு விளக்கப்படுகிறது.

**வைகுண்ட ஏகாதசியும் சொர்க்க வாயிலும் :**

மார்கழி மாதம் வளர்பிறையில் வரும் ஏகாதசியை வைகுண்ட ஏகாதசி என்று வைணவர்கள் சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள். இந் நாளில் வைணவ ஆலயங்களில் 'சொர்க்கவாயில் திறப்பு' என்னும் நிகழ்ச்சி ஏற்றம் பெறுகிறது. ஆலயத்தின் வட வாயில் (கள்) இத்திருவிழா நாட்களின்போது மட்டுமே திறக்கப்பட்டு, அதன் வழி இறைத் திருவுருவங்களை எழுந்தருளச் செய்கின்றனர். இறைவன் எழுந்தருளியதும் மக்கள் இறைவனைப் பின் தொடர்ந்து இவ் வட வாயில் வழி வெளிக்கிளம்புகின்றனர். இவ்விழாவில், மக்கள் சொர்க்க வாயில் திறந்ததும் இறைவன் தங்களைச் சொர்க்கத்திற்கு (மோட்சத்திற்கு) அழைத்துச் செல்வதாகக் கருதுவதால், இறைவன் வழி காட்ட சொர்க்கம் புகுவதாக (அ) மோட்சமடைவதாக நம்பி, மனிதனால் உருவாக்கப்பட்ட சொர்க்க வாயில் வழி புகுந்து செல்கின்றனர். இன்னும் சில ஆலயங்களில் இந்நிகழ்ச்சிக்காக வைகுண்டலோகம் என்னும் பெயரில் தனி மண்டபமே கட்டப்பட்டுள்ளது. இது ஒரு நம்பிக்கை வயப்பட்ட சடங்கு முறையாக இன்றளவும் தொடர்ந்து நடைபெறுவதைக் காண்கிறோம்.

**மங்கல திசை வடக்கு :**

மக்கள் தென் திசையை யமனுக்குரிய திசையாகவும், அதற்கு மறுதலையாகிய வடக்கினை மங்கலத் திசையாகக் கருதப்பட்டு வந்துள்ளதை தொல்காப்பியம் (எழுத், இளம், சிறப்புப்பாயிரம்), பரிபாடல் (8:6-7) ஆகியவற்றால் அறியலாம்.

புதைக்கும் வழக்கத்தினையுடைய மக்கள் இறந்தோரைத் தெற்கே தலையும் வடக்கே காலும் இருக்குமாறு புதைக்குழியில் வைப்பது—இறந்த

திரு. கே. தேவகி பிரகாஷ்,
எம்.ஏ, எம்.பில்,
திருப்பதி.

வரின் முகம் வடக்கு நோக்கி இருக்க வேண்டுமென்ற கொள்கைபற்றியே என்பர்.

மேலும் இன்றைய தமிழரின் வாழ்வில் வடக்குத் திசை பலவகைகளில் சிறப்பினைப் பெறுவதைக் காணலாம். மருத்துவத்தில் வடக்கே போகும வேர்களுக்கே மிகுந்த ஆற்றலுண்டு என்று கருதப்படுவதுடன் அது மருத்துவத்தில் தனி மருந்தாகவும் பயன்படுத்தப்படுகிறது. பிறைச் சந்திரனை உற்று நோக்கி அதன் வடகோடு உயர்ந்திருந்தால் நலமென்றும் தென் கோடு உயர்ந்திருந்தால் தீதென்றும் கூறுகின்ற வழக்கம் நாட்டுப் புறங்களில் இன்றும் உண்டென்பர். சூரியனின் வடதிசைப் பயண (உத்திராயணம்) துவக்க நாளான தைப்பிறப்பு விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

**வடக்கும் தத்துவமும் :**

வடக்கு நோக்கிச் செல்வது சரண யாத்திரை. தெற்கு நோக்கிப் போவது மரண யாத்திரை. வடக்கே தான் இமாசலமும், கைலாயமும் இருக்கிறது. விபீடணனை இராமர் ஆட்கொள்ள வந்தபோது வடக்கே தான் இருந்தார். இறைவனை நாடி, ராஜஸ குணத்தைவிட்டு, சத்துவ குணம் பிரிந்து வடக்கே செல்கிறது. இந்த சத்துவ குணம்தான் இறைவனை அடையும் என்கிறார் திருமுருக கிருபானந்தவாரியார்

**வடக்கிருத்தல் :**

துறவு பூண்டு ஆன்மீக முறையில் இறத்தலை வடக்கிருத்தல் என்பர். இவ்வாறு இறத்தல் தமிழ்நாட்டில் பண்டுதொட்டு இருந்து வருகிறது. இவர்கள் வடக்குத்திசையை நோக்கி யிருந்து சாகும்வரை உண்ணா நோன்பை மேற்கொள்வர். குறிப்பிட்ட நோக்கங்கருதி இதனை மேற்கொள்வது வழக்கமாகும். வடக்கிருத்தல்பற்றி கலைக்களஞ்சியம் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

"வானுலகம் விரும்பினோர் இவ்வுலக நுகர்ச்சியைத் துறந்து பட்டினியில் உடலை மெலிவித்து யோக முயற்சியால் உயிரை நீத்தற்கு, தாம வாழ்ந்த இடத்தைவிட்டு வடதிசையில் சென்று தங்குதலும், மீளாமல நியமத்துடன் வடக்கு நோக்கிச் செல்லுதலும் மரபு. இதனை உத்தர கமனம என்றும் மகாப்பிரத்தானம் என்றும் கூறுவர். தமிழில் இதனை வடக்கிருத்தல் என்பர்".

**துறக்க உலகிற்குரிய திக்கு :**

பாண்டவர்கள் 'மாவிந்த' வனம் சென்று வைகுணடம் அடைந்த வரலாறுபற்றிக் கூறும் 'மாவிந்தம்' எனப் பெரிய நூலில் அவர்கள் வடக்கு நோக்கிச் சென்று வைகுண்டம் அடைந்ததாகக் குறிக்கப்படுகிறது. இந்நூலுக்கு மூல நூலாய் விளங்கும் வியாச பாரதத்திலும் வடக்கு நோக்கிச் சென்று சொர்க்கம் அடைவதாக, மகாப் பிரதானிகப் பருவம், சொர்க்கா ரோகணப் பருவம் ஆகியவற்றில் பேசப்படுகிறது.

பாரதப் போரில் வீடுமர் அர்ச்சுனனால் அம்பெய்யப்பட்டு அம்புப் படுக்கையில் கிடக்கையில், தட்சிணாயனத்தில் உயிர்விட வரும்போது, தன்னை அமைதியான தனியிடத்திற்கு எடுத்துச் செல்லுமாறு பணித்து உத்தராயனம் பிறந்ததும் உயிர்த்தார் என்று சொல்வதுண்டு. எனவே பழந்தமிழர் வடக்கினை துறக்க உலகுக்குரிய திசையாகக் கருதியதுடன் துறக்கம் பெற வேண்டும் என்ற நமபிக்கையே வடக்கிருத்தலின் உட்பொதிவாக அமை கிறது. வைகுண்ட ஏகாதசி விழாவிலும் இக்கருத்தும், நம்பிக்கையும் இழையோடுவதைக் காணமுடிகிறது.

எனவே உயிர்விடுதல் நீங்கலாக' உண்ணா நோனபு, சொர்க்கம் புக வேண்டுமென்ற நமபிககை ஆகிய பண்புகளோடுள்ள ஒத்துப்போதலாலும், வடக்குத் திசையை மங்கலத் திசையாய் சொர்க்கத்திற்குரிய திசையாய் ஏறபதாலும் வடக்கிருத்தலோடு இன்றைய வைகுண்ட ஏகாதசி ஓரளவு ஒத்துப் போகிறது எனலாம்.

**வடக்கும் விஞ்ஞானமும் :**

மனித உடலில் மின்காந்த (Electro Magnetic) அலைகள் உள்ளன. இவற்றுக்கு மூலம் மூளைதான். உலகினை எடுத்துக் கொண்டால் அதற்கு வடதுருவமே மூலமாயுள்ளது. தூக்கத்தில் புத்தியும், மனதும் நமக்கு வசப்படுவதில்லை. அவை களைத்து ஒடுங்கிவிடுகின்றன. இம்மாதிரியான சமயத்தில் சிறிய காந்தத்தை பெரிய காந்தத்திற்கு நேராகப் பிடிப்பது போல் தாறுமாறான விளைவுகளை உண்டாக்கிவிடும். ஆனால் பூசை, தியானம் இவற்றைச் செய்யும் போது நம்மனத்தை வசப்படுத்த முயலும் போது, அதில் முழு வெற்றி இல்லா விட்டாலும் லட்சியமும் கட்டுப்பாடு மாவது நமக்கு அப்போது இருக்கிறது என்று காஞ்சி காமகோடி சரசுவதி சுவாமிகள் தமது அருள் வாக்கில் கூறியுள்ளார்கள்.

**மோட்சம் நல்குபவன் திருமால் :**

நானிலத் தெய்வங்களில் முல்லை நில மாயோனுக்கு முதலிடம் தந்த தொல்காப்பியர் பூவை நிலை என்ற புறத்துறையிலே மோட்சம்நல்குபவன் அவன்தான் என்பார். (தொல். பொருள். அகத். 5; புறத் 63) இவனுக்கே மால் என்று பெயரும் உரித்தாயிற்று என்பதால் தொல்காப்பியர் காலத்திலேயே இப்பண்பு தலைதூக்கப் பெற்றுவிட்டது எனலாம். 'நாறிணர்த்துழாயோன் தாராது துறக்கம் பெறலரிது' என்று பரிபாடல் (15: 15-16) வரி இதனை மெய்ப்பிக்க வல்லது. வைகுந்த வாசனாகிய திருமால் வைகுண்டநாதன் என்றழைக்கப்பெறுகிறார்.

வைணவர்கள் துறக்க உலகாக வைகுண்டத்தையே கொள்கின்றனர்.

"வலங்கொள் தொண்டர்க் கிடமா
வது பாடுஇல் வைகுந்தமே"
(பெரி. திரு. 9.3;10)

என்பதால் இது விளங்கும்.

பழந்தமிழர் வடக்கினைத் துறக்க உலகுக்குரிய திசையாகவும், மங்கலத் திசையாகவும் கருதியபடியால் 'வைகுண்டவாயிலை' ஆலயங்களில் வடதிசையில் அமைத்து வழிபட்டனர்.

# தூப்புல் குல விளக்கும் வேயர்பயந்த விளக்கும்

இரண்டுமே விளக்குகள். அறியாமை, அக்ஞானம் எனும் இருளை அகற்றுவதோடு மட்டுமல்லாது, அறிவு, ஞானம என்கிற விளக்கை ஏற்றி வைக்கிற விளக்குகள்.

இதிலே ஒரு விளக்கு, இன்னொரு விளக்கைப் பாடுகின்றதென்னில், அற்புதமாயிருக்குமே! அதனை சிறிது அனுபவிப்போம்.

'ஸ்ரீவிஷ்ணுசித்த குலநந்தன கல்பவல்லீம்' என்கிறார் தேசிகன். ஆண்டாளை கற்பகவல்லிக்கொடியாகப்பாடுகிறார். கற்பகக்கொடி, நாம் கோரும் ஸகலவற்றையுமளிக்கவல்லது. விஷ்ணு சித்தரின் குடியாகிற நந்தவனத்தே தோன்றிய இக்கொடியால், அக் குலமே மேன்மைபெற்றதாம்.

---

திருமதி மைதிலி வேணுகோபால்.
சென்னை.

---

'ஸாக்ஷாத் க்ஷமாம்'—க்ஷமா எனில் பூமி, பொறுக்கும் தன்மை, மன்னிக்கும் தன்மை-என்றெல்லாம் பொருள் உண்டு.

தென் திசைகளில் ஸஞ்சாரம் செய்து, எல்லாத் தலங்களையும் தரிசித்துக் கொண்டு, வில்லிபுத்தூர் எழுந்தருளினார் ஸ்வாமி தேசிகன். அவர் தங்கியிருந்த திருமாளிகையின் வழியே ஆண்டாளின் புறப்பாடு நடைபெற்றது. ஆண்டாளைத் தரிசித்துப் பரவசராகி, கோதாஸ்துதியைஆண்டாளின்திருக் குணங்களைப் பாடியருளினார். அன்று,அவர் மௌன விரதம் மேறகொண்டிருந்ததையும் பாராது, பலவிதமாயும் பிரார்த்திக்கிறார்.

கண்ணனின் பலவித சேஷ்டிதங்களையும் பரககப் பேசியுள்ள திருப்பாவையையும், நாச்சியார் திருமொழியையும் திருவுள்ளத்தில் கொணடு, ஸ்வாமிகள் ஆண்டாளை, ஸாக்ஷாத் ஸரஸ்வதியாகவே எண்ணுகிறார்.

"தூயப் பெருநீர் யமுனை" என்று, ஆண்டாளின் வாக்கால் யமுனை பாடப் பட்டது. ஆனால், கோதாவரி நதியோ ராவணனிடமிருந்த பயத்தினால், ஸீதை தன்னை ராவணன் கவர்ந்து செல்கிறான் என்று ஸ்ரீராமனிடம் தெரிவிக்கும்படி, கோதாவரி நதியை வணங்கிக் கேட்டுக் கொண்ட பின்பும் அப்படிச் செய்யவில்லை. அதனாலேயே அந்நதி, மனம் வருந்தி, தவமிருந்து "கோதாவரி"—என்று கோதையின் பெயர் பெற்ற பின்புதான் தூய்மையடைந்தது. அதனால் கிருஷ்ணா, யமுனை, ஸரஸ்வதி, காவிரி போன்ற எல்லா நதிகளும் கோதாவரியில் வாஸம் செய்து, தாமும் தூய்மையடைந்தன என்கிறார், ஸ்வாமி. தான் சூடிக் களைந்த பூமாலைகளைத் தந்தும், தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகளைப் பாடித்தந்தும் எம்பெருமானை உவப்பித்து, பக்தவத்ஸலனாக்குகிறாள் ஆண்டாள்.

பூமியான ஆண்டாளின் காதுகளான புற்றிலிருந்து தோன்றிய வால்மீகி எழுதிய காவியம் உலகப் பிரஸித்தி பெற்றதெனில், ஆண்டாளின் அரவிந்தம் போன்ற திருவாக்கிலிருந்து வந்த பிரபந்தத்துக்கு இத்தனை மாதுர்யம் இருப்பதில், என்ன விந்தை?

பெண்ணாய்ப்பிறந்த ஆண்டாள், எம்பெருமானை அனுபவிப்பது பொருத்தமாகவும், பாங்காகவும் இருக்கிறது. இந்தப் பாசுரங்களின் அழகையும் பொருத்தத்தையும் கணட ஆழ்வார்கள், தாங்களும் ஸத்ரீ பாவனை கொண்டு, எம்பெருமானை அடைவதும் பிரிவதுமான நிலைமைகளை எய்தி அவறறுக்குப் பொருத்தமான பாசுரங்களைப் பாடி, தங்களது ஹ்ருதயங்களையும் ச்ருங்கார ரஸைகதாநமாக ஆக்கிக்கொண்டனர். அனுகார ரீதியிலே அமைந்த பகவதனுபவத்தை விட, இயற்கையாகவே அமைந்த ஆண்டாளுடைய பகவதநுபவம் ரஸவத்தரம்.

விஷ்ணுசித்தரின் பெண்ணாகிய ஆண்டாள் சூடிக் களைந்த மாலைகளை, எம்பெருமானுக்கு அவர் ஸமர்ப்பித்ததாலேயே, எம்பெருமான் மிகவும் மகிழ்ந்து, அவருக்குப் "பெரியாழ்வார்" என்கிற பெயரைக் கொடுத்தான் என்று ஸ்வாமி தேசிகன் அவள் சூடிக் களைந்த மாலையின் சிறப்பை வர்ணிக்கிறார்.

ஆண்டாள் அவதரித்ததால்தான் தென் திசை சிறப்புற்றது. எம்பெருமான் குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வட திசை பின்பு காட்டி, தென திசையை ஏன் நோக்கியவாறு இருக்கிறான் என்று ஸ்வாமி தேசிகன் யோசித்தார். தன் தேவியான ஆண்டாளின் திரு அவதாரஸ்தலமாகிய ஸ்ரீவில்லிபுத்தூரின் மீது தோன்றிய பிரேமையால், அத்திசையை நோக்கியவாறே இருக்கிறான் என்று அத்புதமாக ஸாதித்தார்.

**கோதை பிறந்த ஊர், கோவிந்தன் வாழும் ஊர்**

# திருவேங்கடனே தெரிந்தருள்

விநாயகர் காப்பு

சித்தியும் புத்தியும் தந்து சிந்தையில்
நித்தமும் நீயிருந்து நல்ல நினைவினால்
சத்தியமாம் வேங்கடவன் சாரும் அந்தாதியினை
சுத்தமாய் ஆக்கிட சூழ்வாம் கணபதியே.

நூல்

அங்கமது பெற்று அவனியிலே வந்தநாமும்
பங்கமது களைந்து பாதையாம் முக்தியையும்
தங்கமாய் பெற்று தன்னெழில் சூழ்வதுவும்
எங்கும் அவன்தரும் எழில் ஆனந்தமே!
ஆனந்தமும் அறிவும் ஆக்கலும் ஆயர்கோன்
வானளந்த திறமும் வற்றாத நல்லருளும்
ஞானந்த வீட்டையும் ஞாயிறாய் வரும்போது
தேனூறத பொருளாகும் தெவிட்டா இன்பமே!
இன்பமும் ஏற்றமும் ஈன்ற நற்கருணையும்
அன்பருக்கு என்று அனந்தன் அவதாரமும்
மன்பெருக்கு புகழும் மாலவன் தன்னல்லால்
என்புருக்கும் பெருமை வந்து ஈவதேதே!
ஈவதும் இயலாததும் ஈசனும் இடையனுக்கு
ஆவதும் அகன்றதும் ஆணவத்தால் அன்றி
போவதும் புகல்வதும் புண்ணியனும் கோவிந்தனிடம்
மேவத் துலங்கும் மேன்மையும் உம்மிடமே!
உம்மையும் எம்மையும் உருவான உயிரினங்களையும்
அம்மையாய் அப்பனாய் அரங்கனாய் வந்தணைப்பான்
செம்மையாய் இப்பிறப்பில் செப்பினால் அவன் நாமம்
இம்மையும் மறுமையும் எங்கு ஊன்றிடுவதே!
ஊன்றிய பொருளும் உவக்கும் பேரானந்தம்
தோன்றிய சுடரொளியும் துணையும் சுந்தரமும்
கன்றுக்கீனும் கறவைபோல் கார்மேனி வண்ணன்
நன்றாய் உமக்கு நல்குவன் எந்நாளுமே!
எந்நாளும் இருகரம் குவித்து இதயத்தால்
வந்தனை செய்து வழுத்துதல் வேங்கடனுக்கு
தந்திட்ட அர்ச்சனையாய் தாளாத அன்புடன்
முந்தியவினை யாவும் மூழ்கவே ஏற்பனே!
ஏற்பதும் என்னை எந்நிலையில் வைப்பதும்
பார்ப்பதும் பவளச் செவ்வாயால் கோர்ப்பதும்
ஓர்பதம் நாடியே உன்னையும் அடையுமந்த
சீர்பாதம் உனதன்றி செப்புதல் ஐயமே!
ஐயனே ஹரியே அருமறைப் பொருளோனே
நாயனே நற்றிரு வேங்கட நாதனே
தூயனே தோழனே துணைவரும் மாயனே
சேயனேன் சீர்பெறுவதுன் சிறப்புடை ஒளியாலே!
ஒளியும் வழியும் ஓங்கார நெளியும்
விழியும் தொழிலும் விளக்கும் மொழியும்
சுழியும் துகிலும் துய்யமெய்க் கொழியும்
தெளிவும் திருவேங்கடன் தெரிசனத்தால் ஓங்கிடுமே!
ஓங்கார நாதமும் உருவான வேதமும்
ரீங்கார நாமமும் நினையல்லால் சாதகமோ
பாங்கான மக்கள் பவவினை களைந்திட்டே
தேங்கும் இன்பமதை திருவேங்கடனே தெரிந்தருள்.

ஆக்கம் : கவிஞர். சோமசுந்தரப் பெருமாள் - தங்கவயல்.

சோதி மணிமாடம் தோன்றும் ஊர்,
நீதியால்
நல்ல பத்தர் வாழும் ஊர், நான்
மறைகள் ஓதும் ஊர்
வில்லிபுத்தூர் வேதக்கோனூர்:

கோதை பிறந்த ஊரிலே, கோவிந்தன் வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

ஆண்டாளுக்கும், அரங்கனுக்கும் திருமணம் இனிது நடக்கிறது. மங்கள வாத்யம் என்று தனியாக எதற்கு? கோதை சூடிக் களைந்த மாலைகளை அரங்கன் சூட்டிக் கொண்டிருக்கின்றானே. அம்மாலைகளின் மலர்களிலிருந்து தேன் வழிந்து கொண்டிருக்கிறது. தேனுண்ணும் வண்டுகள் அவற்றைக் கூட்டங் கூட்டமாய் மொய்த்துக் கொண்டிருக்கின்றன. அந்த ரீங்கார இசையே மங்கள வாத்யமாக முழங்குகிறதே என்கிறார் ஸ்வாமி.

தோழிகள், ஆண்டாளைப் பரிஹாஸம் செய்து மகிழ்கின்றனர். புது மணத் தம்பதிகளும், அவற்றையெல்லாம்கேட்டு, வயிறு புடைக்கச்சிரித்து இன்புறுகின்றனர்.

ஒருத்தி சொல்கிறாள். "தாய் தந்தையராகப் பார்த்து விவாஹம் செய்து வைத்தலே நல்லது என்று இப்போது புரிகிறதா?"

"ஏன்? இவருக்கென்ன குறைச்சலாம்".

"அரங்கனுக்கு ஜாதகம் உண்டா என்று கேள். அவர் பிறந்த தேதி கிழமை, மாஸம், வருஷம் என்ன என்று யாருக்கேனும் தெரியுமா? தாய் தந்தையர் யார்? யாருக்குமே தெரியாது. எப்போதிலிருந்தோ, அநாதி காலந்தொட்டு இருக்கிற கிழவனையா, பழுத்த கிழத்தையா பண்ணிக் கொள்வது? கஷ்டம் கஷ்டம்" என்று தலையில் அடித்துக் கொள்கிறாள்.

இன்னொருத்தி, "கோதே! நன்ருக யோசித்துப்பார். மெத்தென்ற பஞ்ச சயனம் என்று பாடிய நீ, பாம்புப் படுக்கையிலேயேதான் படுத்துறங்கப் போகிருய்! வெறும் பாம்பா அது? நச்சுப்பாம்பு. அதிலும் ஆயிரம் நாக்குகள் கொண்ட பாம்பு" என்கிருள்.

மற்ருெருத்தி, "நீ வெளியே போகணுமென்ருல், ஒரு ரதமாவதுஉண்டா? கேவலம், ஒரு யானை, குதிரை கூட இல்லை. பக்ஷியின் மீதுதான் போக வேண்டும். ஒருவர் அந்தப் பக்ஷியின் மீது உட்காருவதே கஷ்டம். இருவராகப் போயாக வேண்டும். மெதுவாக அந்தப் பறவை பறந்தாலாவது வழிநடையின் அழகைக் கண்டு ரஸிக்க முடியும். ஒரு விநாடிப்போதில் பல யோஜனைகளைக் கடந்துவிடும். என்ன பிரயோஜனம்?" என்று கூறுகிருள்.

இந்தப் பரிஹாஸ வார்த்தைகளால் அரங்கனின் பரத்வம், பரக்கப் பேசப் படுகிறது, ஸ்வாமி தேசிகனின் திருவாக்கால்.

'கோதே! இதுவரை, வெறும் ரங்கனுயிருந்தவன், இப்போது பரிமள ரங்கனுகிவிட்டான். காரணம், உன்னுடைய குடிலமான கூந்தலில் நறுமணம் கமழ்விக்கப்பட்ட மாலைகளாலே விலக்ஷணமானதொரு பரிமளம் வீசுகிறது. அதனுல்தான் வேதங்கள் அவனைத் தாங்கிக்கொண்டிருக்கின்றன. அந்த வேதங்களின் சுகந்தத்தைவிட, உன்னுடைய திருக்குழல் மாலைகளே இன்னும் சிறப்பாக பரிமளம் வீசுவதால், எம்பெருமான் அவற்றைத்தான் பிரியமாக அணிகிருன்'

ஆண்டாளும் அரங்கனும் இவற்றைக் கேட்டுக்கேட்டு, சிரித்து, வயிறு வலித்ததுதான் மிச்சம்.

கோதாஸ்துதியை ஸ்வாமி தேசிகன், முயற்சி செய்து எழுதவேயில்லை. தானுக, ப்ரவாஹமாய் ஓடிவரும் நதிபோல, முத்துக்கள் பவளங்கள் போன்ற ரத்தினங்களையும் அடித்துக் கொண்டு வரும் நதியைப்போல, சந்தனக்கட்டைகள் முதலான உயர் வாசனைக் கட்டைகளை அள்ளிக் கொண்டு வரும் நதியைப்போல, உடலைக் காக்கும் மூலிகைகளை அடித்துக் கொண்டு வரும் ஜீவ நதியைப் போல, உயிரைக் காக்கின்ற மூலிகையான பக்தியை அடித்துக் கொண்டு வருகின்ற கோதாஸ்துதியை அதியத்புதமாக ஸாதித்தருளியுள்ளார்.

ஸ்வாமி தேசிகனின் இந்த கோதாஸ்துதியைப் பக்தியோடு படித்தால் வாழ்ந்திருக்கும் வரை, கோதையின் கண் வட்டத்தின் மஹிமையினுல் அரங்கனின் அருளுக்குப் பொருளாயும், பின்னர், நலம் அந்தமில்லாதோர் நாட்டிலே நித்யவாஸமும் பெறுவோம் என்பது ஸத்யம்.

கோதையின் புகழ் உள்ளவரை, கோதாஸ்துதியின் புகழும் நிலைக்கும்.

கோதையைப்பற்றி காலக்ஷேபங்கள் நடக்கும் இடங்களிலெல்லாம், கோதாஸ்துதிதான் பேசப்படும்.

கூண்டிற்குள்ளே இருக்கும் பிராணிக்கு, வெளியிலே இருக்கும் துஷ்ட ஜந்துக்களால், ஒரு தீங்கும் வர முடியாதல்லவா? அதைப்போலவே, இந்த கோதாஸ்துதி என்கிற அழகிய, பத்திரமான, பாதுகாப்பான கூண்டுக்குள்ளே நாம் போய்விட்டால், எந்த பயமும் இருக்காது. எந்தத் தீங்கும் நேராது. கோதாஸ்துதி, மந்திர ஜபங்களின்பலனைவிட,லக்ஷம் மடங்கு அதிகமாய் பலனளிக்கக்கூடியது.

திரு ஆடிப்பூரத்து செகத்து உதித்த
தாள் வாழியே!
திருப்பாவை முப்பதும் செப்பினுள்
வாழியே!
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்
பிள்ளை வாழியே!
பெரும் பூதூர் மாமுனிக்குப் பின்னு
ஞள் வாழியே!
ஒரு நூற்று நாற்பத்து மூன்றுரைத்
தாள் வாழியே!
உயர் அரங்கர்க்கே கண்ணி உகந்தளித்
தாள் வாழியே!
மறுவாறும் திருமல்லி வள நாடி
வாழியே
வணபுதுவை நகர்க் கோதை மலர்ப்
பதங்கள் வாழியே!

ஸ்வாமி தேசிகன் வாழித் திருநாமம்.

வஞ்சப் பர சமயம் மாற்ற வந்தோன்
வாழியே!
மன்னு புகழ்ப் பூதூரான் மன
முகப்போன் வாழியே!
கஞ்சத் திருமங்கை உகக்க வந்தோன்
வாழியே
கலியனுரை குடிகொண்ட கருத்
துடையோன் வாழியே
செஞ்சொல் தமிழ் மறைகள் தெளிந்
துரைப்போன் வாழியே
திருமலை மால் திருமணியாய் சிறக்க
வந்தோன் வாழியே
தஞ்சப் பரகதியைத் தந்தருள்வோன்
வாழியே
தண் தமிழ் தூப்புல் திருவேங்கடன்
தாள் வாழியே!

என்று இருவரையும் வாழ்த்தி வணங்கி, நற்பேறு பெறுவோம்.

★



# பகர் அல்லைப் பகல்செய் திருவேங்கடத்தான்

ஒளியினால் இருட்டைப் பகலாக்கும் திருவேங்கடத்தான் என்றபொருளில் "பகர் அல்லைப் பகல் செய் திருவேங்கடத்தான்" என்று ஆழ்வார் அழைப்பதின் கருத்தினை ஆராய்வோம்.

ஆபத்திலிருந்து தப்பும் ஒருவன் தன்னைக் காக்கும் தகுதியுடையவனிடம் அடைக்கலம்புகுவான். அவனை விட்டு அகன்றால் மீண்டும் நிச்சயம் ஆபத்து தொடரும்என்பதைத் தெளிவாக உணரும் பொழுது, அவனை யொட்டிக்கொண்டிருப்பானே தவிர தன் தொடர்பை வெட்டிக் கொண்டு பிரியான்.

அதுபோல் தான் உண்டாக்கிய சிறையினின்று மீள முடியாத பட்டுப் பூச்சியைப் போல் மூல இயற்கையால் (பிரக்ருதி) உண்டான மாயை ஏற்படுத்தும் பாசத்தை மேலும் மேலும் வளர்த்துக் கொண்டார் ஆழ்வார் அவைகளை அனுபவித்தும் அவருடைய உள்ளம் திருப்தியடையவில்லை; நிம்மதியடையவில்லை. அந்நிலையினையுண்டாக்கிய சம்சாரமாம் நச்சு மரத்தின் இயல்பினையுணர்ந்து அதனை விட்டு இறங்கி விட்டார். மீண்டும் ஏறினால் பாசமயக்கம் அகவிருளாகப் படர்ந்து அறியாமை நோயினையுண்டாக்கும்; விபரீத அறிவை விருத்தியாக்கும்; அகங்காரமாகிய ஆர்ப்பை அதிகரிக்கும் என்பதை அறிந்தார். அதனைத் தடுக்க திருவேங்கடமுடையான் பாதகமலங்களுக்குக் கைங்கர்யம் செய்து அவைகளை விட்டு அகலாமலிருப்பதே 'பாசமயக்கம்' என்ற பேராபத்திலிருந்து மீளும் வழி என்பதை உணர்ந்து கதறுகிறார் ஆழ்வார். "அந்தோ! அடியேன் உன் பாதம் அகலகில்லேன் இறையுமே."

மயர்வற மதிநலத்தைக் கெடுக்கும் சம்சாரத்தின் கொடுமையைக் குறிப்புணர்த்துவதற்காக 'அந்தோ' (ஐயோ) என்ற சொல்லை உபயோகித்திருக்கிறார். நொடிப் பொழுதும் (இறையுமே), என்ற சொல்லின் மூலம் திருவேங்கடமுடையவனின் கைங்கர்யத்தில் தமது உள்ளத்தின் ஈடுபாட்டைக் குறிப்புணர்த்துகிறார்.

காகத்துக்கு இரவில் ஒன்றும் தெரியாது. பகலில்தான் தெரியும். கோட்டானுக்குப் பகலில் ஒன்றும் தெரியாது, இரவில்தான் தெரியும். அவைகளுடைய முயற்சியால் பகலையோ இரவையோ மாறிப் பார்க்க முடியாது. அவைகளுடைய கர்மத்தினால் அவைகளைப் படைத்த திருவேங்கடமுடையான் கருணை வைத்தால் அவைகள் பார்க்க முடியும்.

அதுபோல் அறிவுடைய ஆன்மாக்கள் (சேதனர்கள்) தங்களுடைய முயற்சியினால் அகவிருளை, பாச மயக்கத்தை அகற்ற முடியாது. திருவேங்கடமுடையானை அடைக்கலம் அடைந்தால், அவன் அடியார்களிடம் கருணை காட்டி, அவற்றை அகற்றுவான்.

சிந்தாமணிகள் என்பவை ஒருவகை உயர்ந்த இரத்தினங்கள். அவைகள் இருட்டையும் பகலாக்கும் ஒளியையுடையன. அந்தவகை ரத்தினங்களே திருவேங்கடமுடையானின் திவ்ய திருமேனியும் ஆயுதங்களுமாகும்.

அவனை அடைக்கலம் அடைந்தார் ஆழ்வார். அவன் ஆழ்வாருடைய அகவிருளாகிய உடற்பற்றை நீக்கி ஆன்ம ஒளியாகிய பகலை உண்டாக்கினான் என்கிறார். "சிந்தாமணிகள் பகர் அல்லைப் பகல் செய் திருவேங்கடத்தானே."

ஸ்தோத்திரம் செய்யும் தன்மையுடையன வேதங்கள். அவைகள் முழுவதும் எம்பெருமான் திருவடிகளிலீடுபட்டுப் பேசுகின்றன. அதனால் உயர்ந்து நிற்கிறான் அந்த எம்பெருமான். அவன் அந்நாளில் (பாரதப் போரில்) தன் சக்ராயுதத்தால் மறைத்தான் பகற்பொழுதினை; வரவழைத்தான் இருளினை, என்கிறார் ஸ்வாமி தேசிகன்.

**பரவும் மறைகள் எல்லாம் பதம்**
**சேர்ந்து ஒன்ற நின்ற பிரான்**
**அவன் இரவியின் காலத்து அழைத்த**
**எழிற்படையோன்**

**திரு. A. ஸ்ரீராமுலு தேசிகன்,**
**ஸ்ரீவில்லிபுத்தூர்.**

பாரதப் போர் பதினான்காம் நாளில் அர்ச்சுனன் தன் மகன் அபிமன்யூவைக் கொன்ற ஜயத்திரதனை அன்று மாலைநேரத்துக்குள் கொல்லாவிடில் தான் அக்னியில் இறங்குவதாகச் சபதம் செய்தான். அதனை அறிந்தனர் துரியோதனாதியர். வெளியில் விடவில்லை ஜயத்திரதனை; கவனத்துடன் அவனைப் பாதுகாத்தனர், ஓர் பாதாள அறையில். மாலைநேரம் நெருங்கவே கவலை அடைந்தான் அர்ச்சுனன். அதனைப் போக்கக் கிருஷ்ணன் எடுத்தான் தன் சக்ராயுதத்தை; அதனைக் கொண்டு பகற்பொழுதிலேயே மறைத்தான் சூரியனை.

அதனால் இரவாகக் காணப்பட்டது. தன் சபதத்தின்படி அக்னியில் இறங்க முயன்றான் அர்ச்சுனன். அக்காட்சியினை மகிழ்வுடன் பார்க்க துரியோதனாதியர் ஜயத்திரதனையும் அழைத்துக் கொண்டு வந்தனர்.

(40-ம் பக்கம் பார்க்க)

# உதிரிப் பூக்கள்

வாழ்த்த வாயும், நினைக்க மட நெஞ்சும், தாழ்த்தச் சென்னியும் தந்தத‌லைவன் இறைவன். அந்த இறைவனை எல்லோரும் வணங்குகின்றனர். இயற்கைப் பொருட்கள்கூட வணங்குகின்றன. 'சூரியன் தனது கதிர்களாகிய கைகளால் கடவுளைத் தொழுகிறான். பறவைகள் இசையோடு பாடியும் ஆடியும் துதிக்கின்றன. மரங்களெல்லாம் மலர்களைத் தூவிப் போற்றுகின்றன. பஞ்சபூதங்கள் தத்தம் தொழில்களைச் செய்து பணிகின்றன. அலைவீசும் கடல் அதன் ஓசையால் வாழ்த்துகிறது. ஆனால், மனமே! நீ மட்டும் வாழ்த்தாமல் இருப்பது ஏன்?' என்று கேட்டுத் தாமும் இறைவனை வணங்குகிறார் மாயூரம் வேதநாயகம் பிள்ளை என்பவர்.

மாயூரம் வேதநாயகம் அவர்கள் நீதிமன்றத்தில் முன்சீபாக வேலை பார்த்தவர். நீதி தவறாதவர். ஏழை மக்களிடம் இரக்கம் மிக்கவர். தெய்வபக்தி நிறைந்தவர். தமிழ்ப் புலமை சான்றவர். அரசாங்க வேலையில் இருப்பதால், இயற்கைப்பொருள்களைப்போல, எந்நேரமும் தம்மால் இறைவனைத் துதிக்க முடியவில்லையே என வருந்தினர். அதனால்,

கதிரவன் கிரணக் கையால்
கடவுளைத் தொழுவான் ; புட்கள்
சுதியொடும் ஆடிப் பாடித்
துதிசெயும்; தருக்கள் எல்லாம்
பொதியலர் தூவிப் போற்றும் ;
பூதம்தம் தொழில்செய்து ஏத்தும்;
அதிர்கடல் ஒலியால் வாழ்த்தும்;
அகமேநீ வாழ்த்தாது என்னே ?

என்று தம் மனத்தை நோக்கிக் கேட்கிறார். அந்த இயற்கைப் பொருள்களைப்போல எந்நேரமும் இறைவனை வாழ்த்த வேண்டும் என்று தம் மனத்திற்குச் சொல்லுவதுபோல, உலக மக்களுக்கெல்லாம் உணர்த்துகிறார் அவர்.

பூமாலை சூட்டித் தெய்வத்தை வணங்கும் பக்தர்கள் சிலர். உதிரிப் பூக்களை இறைவன் மீது தூவி வணங்கும்பக்தர்கள் சிலர். அவர்கள் மலரஞ்சலி செய்து தெய்வத்தைப் போற்றுவதுபோல, இறைவன் பெருமையை மக்கள் எப்போதும் நினைக்கும் வண்ணம் தமிழ்க் கவிஞர்கள் கவிதாஞ்சலி செய்து வாழ்த்தியிருக்கிறார்கள். அவர்களில் சிலர் காவிய மாலை தொடுத்து இறைவனுக்குச் சூட்டியிருக்கிறார்கள். சிலர் உதிரிப் பூக்களைப் போன்ற தனிப்பாடல்களால் இறைவனது பெருமையைப் போற்றியிருக்கிறார்கள். கவிச்சக்கரவர்த்தி கம்பர், பல்வேறு வண்ணத் தமிழ்ப் பாக்களால் 'கம்பராமாயணம்' என்னும் காவியமாலை தொடுத்து, இராம பிரானுக்கு அணிவித்துத் தம் பக்திப் பரவசத்தைக் காட்டினர். வில்லி புத்தூர் ஆழ்வாரும் வியாச பாரதத்தைத் தமிழில் காவியமாலையாகத் தொடுத்துக் கண்ணபிரானுக்கு அணிவித்து, பக்தி வெள்ளத்தைப் பரப்பினர். பிற்காலத்தில் தோன்றிய கவிஞர்களில் சிலர் கம்பரைப்போலவும், வில்லியைப்போலவும் காவிய மாலைகளைத் தொடுத்து அணிவிக்கா விட்டாலும், அவ்வப்போது பல தமிழ்ப் பாடல்களைப் பாடித் தம் மனத்தில் இருக்கும் பக்தியை வெளிக் காட்டியுள்ளனர். அவர்களில் கவி காளமேகம் குறிப்பிடத்தக்கவர்.

காளமேகம் அவர்கள் திருக் குடந்தை வைணவ அந்தணர். பிற் காலத்தில் சைவராக மாறினர். திருவானைக்கா அகிலாண்டேஸ்வரி அருளால் கவிபாடும் ஆற்றல் பெற்றார். நினைத்ததுடன் தொடர்ந்து நூற்றுக் கணக்கான பாடல்களைப் பாடும் திறமை உடையவர். இருபொருள் படச் சிலேடையாகவும், நகைச்சுவையாகவும் பாடுவதில் வல்லவர். திருவேங்கடத் தெய்வம் திருமாலைப்பற்றி அவர் பாடிய பாடல்கள் படித்து மகிழத் தக்கவை.

செய்யுள் வகைகளில் 'வெண்பா' என்பது ஒருவகை. நான்கு வரிகளில் பாடப்படும் பாட்டு அது. காளமேகத்தின் கவித்திறமையைச் சோதிக்க விரும்பினர் ஒரு பக்தர். 'திருமாலின் அவதாரம் பத்தையும் அரை வெண்பாவில் அமைத்துப் பாட முடியுமா?' என்று அவர் காளமேகத்திடம் கேட்டார். கவிஞர் சிறிதும் தயங்கவில்லை. உடனே,

மெச்சுபுகழ் வேங்கடவா ! வெண்பா
வில் பாதியில்என்
இச்சையில்உன் சன்மம் எடுக்கவா —
மச்சா,கூர்
மாகோலா, சிங்காவா மாராமா,
ராமாரா
மாகோபா லாமாஆ வாய்.

என்னும் செய்யுளைப் பாடி, 'புகழ் மிக்க திருவேங்கடமலையில் இருப்பவனே! நான் பாடும் இந்த வெண்பாவின் அரைப்பகுதியில் உன் பிறப்புக்களை எடுத்துவர வேண்டும். மீன் அவதாரம் எடுத்தவனே! ஆமையாக அவதரித்தவனே! பன்றிக்கோலம் கொண்டவனே! நரசிங்கமாக வந்தவனே! வாமன அவதாரம் பெற்றவனே! பரசுராமனே! தசரதராமனே! பலராமனே! கண்ணனே! இந்தக் கலியுலகத்தில் இனி நீ குதிரையாக அவதரிப்பாய்!' என இறைவனின் தசாவதாரங்களையும் பாடி அந்தப் பக்தனைப் பரவசப்படுத்தினர்.

புலவர் பெ. கிருஷ்ணராஜன்: M.A.M.Ed.
சேலம்.

பாரதப் போரில் பாண்டவர்கள் அடைந்த வெற்றியை நினைத்துப் பார்க்கிறார் காளமேகம். பாண்டவர்கள் ஐவர். அவர்களை எதிர்த்துக் களத்தில் நின்ற துரியோதனனை முதலியோர் நூற்றுவர். நூற்றுவரை எதிர்த்து ஐவரால் எப்படி வெற்றி பெறமுடிந்தது? யாரால்இந்தவெற்றி பாண்டவர்களுக்குக் கிடைத்தது? இந்த வெற்றிக்குக் காரணம் எது? சிந்தித்துப் பார்த்த காளமேகம், பாஞ்சசன்னியம் என்னும் சங்கல்லவா பாண்டவர்க்கு வெற்றியைச் சேர்த்தது என்கிறார்.

சதுரரங்கர் சங்சத் தழகாசெங் கைச
சங்கை
அதரமிசை வைத்திலரே ஆயின்—
முதலே
வருங்குளத்தின் குண்டகக்கை வைப்
பரன்றே அன்று
பொருங்களத்தில் நூற்றுவர்முன்
போய்

என்பது காளமேகத்தின் பாடல் 'திருவரங்கத்தில் இருப்பவரும் சங்கைக் கையில் கொண்டவருமான திருமால், பாரதப்போர் நடந்தகாலத்தில் தன் கையிலிருந்த பாஞ்சசன்னியம் என்னும் சங்கை உதட்டில் வைத்து ஊதாமல் இருந்திருந்தால், பாண்டவர் ஐவரும் குருக்ஷேத்திரப் போர்க் களத்தில் துரியோதனன் முதலிய நூற்றுவருக்கு எதிரில் தலையில் கை வைத்துக் கொண்டுதான் நின்றிருக்க வேண்டும்' என்று அவர் கூறுகிறார்.

அடியவர் பற்றி வணங்கும் திருமாலின் திருவடிச் சிறப்பை எண்ணிப் பார்க்கிறது காளமேகத்தின் உள்ளம். 'மாவலி என்னும் அரக்கனின் செருக்கை அடக்குவதற்காக வாமன அவதாரம் எடுத்து மூவுலகையும் ஈரடியால் அளந்தது. பன்னிரண்டு ஆண்டு வனவாசமும் ஓராண்டு அஞ்ஞாத வாசமும் முடித்த பாண்டவர்க்கு அவர்களது நாடும் செல்வமும் பெற்றுத்தருவதற்காகத் துரியோதனனிடம் தூதாக நடந்து சென்றது. யமுனையின் மடுவில் இருந்து கொண்டு ஆயர் சிறுவர்களுக்கு ஆபத்து விளைவித்த காளிங்கன் என்னும் பாம்பினை அடக்கி அதன் தலைமீது நடனமாடியது. இந்திரன் காரணமாகத் தன் கணவனது சாபத்தால் கல்லாகிப் போன அகலிகையை மீண்டும் பெண்ணாக்கியது. கம்சனின் சூழ்ச்சியால் தன்னைக் கொல்லுவதற்காக வண்டிச் சக்கரத்தின்வடிவத்தில்வந்தஅரக்கனை உதைத்துக் கொன்றது. ஆகிய 'திருமாலின் திருவடிப் பெருமை இவ்வளவையும் ஒரே பாடலில் அடக்கிக் கூறுவதுகாளமேகத்தின் கவிச் சிறப்பை உணர்த்துகிறது.

பாரளக்கும் தூதுசெல்லும் பையர
வின் மேல்நடிக்கும்
சிரகலி சாபத்தைத் தீர்க்குமே—ஊர்
அருகில்
சண்டச் சகடுதைக்கும் தையலாய் கார்
நீல
கண்டத்தார் ஊரான் கழல்.

என்பது அவரது பாடல்.

சொற்களை வைத்து விளையாடுவதில் வல்லவர் காளமேகம். அந்தச் சொல் விளையாட்டிலும் திருமாலின் பெருமைகளையே பேசுகிறார். ஒரு சொல் இரு பொருள் தருமாறு பாடும் சிலேடைப் பாடல்களில் திருமாலின் சிறப்புகளைக் கூறுகிறார். திருமாலும் முறமும் சமம் என்று நகைச்சுவையாகக் கற்பனை செய்கிறது அவரது மனம். திருமாலுக்கும் முறத்துக்கும் பொருந்தக்கூடிய பொதுவான சொற்களைக்கொண்டு பாடலை அமைக்கிறார்.

வல்லரியாய் உற்றிடலால், மாதகர்
கையில் பற்றிடலால்,
சொல்லரிய மாப்புடைக்கத் தோன்று
தலால்—வல்லோர்
அகம்தனிலே வாழ்தலால் அன்று
உலகு அளந்த
முகுந்தனுமே ஆகும் முறம்.

என்று பாடி, திருமாலும் முறமும் சமம் என்கிறார் அவர். எப்படி? முறம் புடைப்பதற்கு (அரி) கருவியாக உள்ளது; திருமால் நரசிம்ம (அரி) வடிவமாகத் தோன்றினார். முறத்தைப் பெண்கள் கையில் பிடித்திருப்பார்கள்; திருமாலைக் கிருஷ்ணவதாரத்தில் ஆயர்குலப் பெண்கள் தம் கைகளால் பிடித்துக்கொண்டனர். முறம் மாவு புடைப்பதற்கு உதவுகிறது; குவலையா பீடம் என்னும் யானையை (மா) கொல்ல அவதரித்தார். சமையல் கலையில் வல்லவர்களின் வீட்டிலெல்லாம் முறம் இருக்கும்; பக்தியில் வல்லவர்களின் மனங்களிலெல்லாம் திருமால் இருப்பார் என்று இரு பொருள்படப் பாடிக் கற்பனைத்திறனில் கொடி கட்டிப்பறக்கிறார் காளமேகம். இவ்வாறே திருமால், வானவில், வெற்றிலை என்னும் மூன்றிற்கும் சிலேடை அமைத்துப் பாடியிருப்பது இவரது கவித்திறமையை மட்டுமல்லாமல், திருமால் மீது இவர் கொண்ட பக்தியையும் நமக்கு உணர்த்துகிறது.

பாரத நாட்டின் புண்ணிய நகரங்கள் ஏழு. அவற்றுள் காஞ்சிபுரமும் ஒன்று. 'நகரேஷு காஞ்சி' என வடமொழிச் சுலோகம் இந்நகரைப் பாராட்டும். இங்குள்ள திருக்கோயில்களில் வரதராசப் பெருமாள் கோயில் பழமை மிக்கது. இங்கு ஆண்டுதோறும் திருவிழாக் காலத்தில் இறைவனைத் திருவீதி உலாவாகக் கருடவாகனத்தின்மீது கொண்டுசெல்வர். ஒரு சமயம் காளமேகப் புலவர் அந்நகருக்குப் போயிருந்தார். அப்போது அத்திருக்கோயிலில் விழா நடந்து கொண்டிருந்தது. வரதராசப் பெருமாளைக் கருட வாகனத்தின் மீது ஊர்வலமாகக் கொண்டுபோய்க் கொண்டிருந்தனர். அந்த ஊர்வலம் தெரு ஒன்றின் வழியாக வந்து கொண்டிருந்தபோது காளமேகம் எதிர்ப்பட்டார். கருட வாகனம் பெருமாளைச் சுமந்து செல்வது அவருக்கு ஒரு நகைச்சுவை உணர்வை உண்டாக்கியது. 'கோயிலில் இருக்க வேண்டிய பெருமாள் சும்மா அங்கேயே இருக்காமல், பக்தர்களுக்கு

# கோதானம் என்றால் என்ன?

கோதானம் என்பதற்கு பொதுவாக பசுவைத் தானம் செய்தல் என்று பொருள் கொள்வார்கள்.

கோதானம் என்பதற்குத் தலை முடியை வெட்டுதல் என்று பொருள்.

பிராம்மணருக்குப் பதினாறும் வயதிலும், க்ஷத்திரியர்களுக்கு இருபத்தொன்றும் வயதிலும் செய்யப்படும் சடங்குதான் கோதானம் எனப்படும்.

ஆதாரம்: ரகுவம்ஸ காவியம்.

தகவல்: க. இராமலிங்கம்-புதுப்பேட்டை.

---

அருள் செய்ய விரும்பிக் கோயிலை விட்டு வெளியில் வந்தார். அதனால் கருடன் அவரைத் தூக்கிக் கொண்டு போகிறது, பாருங்கள்' என்று வேடிக்கையாகப் பாடினார்.

பெருமாளும் நல்ல பெருமாள்; அவர் தம்
திருநாளும் நல்ல திருநாள்—பெரு மாள்
இருந்திடத்தில் சும்மா இராமை யினால், ஐயோ
பருந்தெடுத்துப் போகிறதே பார்.

என்னும் இப்பாடல் வரதராஜப்பெருமாள் கருட வாகனத்தின்மீது எழுந்தருளிய காட்சியைப் புகழ்கிறது.

ஒரு சமயம் காளமேகப் புலவர் திருமலைக்குச் சென்றிருந்தார். அங்கு விநாயகப்பெருமான் கோயில் இருப்பதைக் கண்டார். விஷ்ணு தலத்திற்கு விநாயகர் எதற்காக வந்தார் என்று காளமேகம் யோசித்தார். உடனே, குறும்பும் நகைச்சுவையும் மிக்க புலவர் உள்ளத்தில் கற்பனை வெள்ளம் பெருக்கெடுத்தது. 'தன் தந்தையாகிய சிவபெருமான் பிறப்பும், இறப்பும் இல்லாமல் எப்போதும் நிலைபேறுடையவராதலின், அவரது சொத்துக்கு வாரிசு ஆக முடியாதென்று நினைத்து விநாயகர் அவரிடம் போகவில்லை. அதே சமயம் தன் மாமனாகிய திருமால் பத்துமுறை பிறந்து இறக்கும் தன்மையுடையவர் ஆதலாலும், அவரது மகன் மன்மதனைத் தன் தந்தை எரித்துவிட்டதாலும் மாமனாரின் சொத்துக்காக விநாயகர் திருமலைக்கு வந்திருக்கிறார்' என்னும் கருத்தை அமைத்து

தந்தை பிறந்திறவாத் தன்மையினால் தன்மாமன்
வந்து பிறக்கும் வண்மையினால்— முந்தொருநாள்
வீணிக்கு வேளை எரித்தான் மகன் மாமன்
காணிக்கு வந்திருந்தான் காண்.

எனப் பாடி, வைணவத் தலமாகிய திருமலையில் சைவத்திற்கும் (விநாயகருக்கு) இடமளித்திருப்பதைப் பாராட்டுகிறார் புலவர்.

காளமேகப் புலவர் காலத்தில் சைவரும் வைணவரும் ஒருவருக்கொருவர் பகை கண்டனர். சைவர்கள் திருமாலை இழித்தும் பழித்தும் பேசுவர். வைணவர்கள் சிவபெருமானை ஏளனம் செய்து பேசுவார்கள். இதைக் கண்டு மனம் வருந்தினார் காளமேகம். 'அரியும் சிவனும் ஒன்றே' என்பதை அவர்களுக்கு உணர்த்த விரும்பினார். சிவபெருமானும் திருமாலும் ஒருவருக்கொருவர் அன்போடும் உதவியாகவும் இருந்த செய்திகளையெல்லாம் ஒன்றாகத் திரட்டினார்.

ஒரு சமயம் சிவ பூசையின்போது, திருமால் தம் கண் ஒன்றைத் தோண்டி அதையே தாமரை மலராகச் சிவபெருமானுக்கு அர்ப்பணித்தார். உலக இறுதிக் காலத்தில் சிவபெருமானின் உடலில் ஒரு பாதியாக ஆனார். சிவபெருமானைச் சுமப்பதற்கு ஒரு சமயம் திருமால் காளை வாகனமாக மாறினார். சிவபெருமான் திரிபுரங்களை எரிப்பதற்கு அவரது வில்லில், திருமால் அம்பாக இருந்து உதவினார். மற்றொரு சமயம் திருமால் மோகினி அவதாரம் எடுத்துச் சிவபெருமானுக்கு மனைவியாகவும் இருந்திருக்கிறார். இந்தச் செய்திகளையெல்லாம் ஒன்று சேர்த்து,

கடம்பவனச் சொக்கருக்கு கண்ணன் தான் வேறோ
இடம் பெரிய கண்ணொன்றை ஈந்தான் —உடம்பதனில்
செம்பாதி ஆனான் சுமக்க எருதானான்
அம்பானான் தேவியுமா னான்.

என்று பாடி, 'சிவபெருமானுக்குத் திருமால் பகையானவரல்ல. கடவுளரெல்லாம் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்கும்போது, அத்தக் கடவுள் பக்தர்களாகிய நீங்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்ளலாமா? சைவமும் வைணவமும் இந்து சமயத்தின் இரண்டு கண்களைப் போன்றவை' என்பதை உணர்த்தினார். இவ்வாறு சமயப் பூசலை ஒழித்துச் சமரசம் தழைக்கப் பாடினார் காளமேகம்.

காளமேகம் காவிய மாலை சூட்டிக் கடவுளை வணங்கவில்லை. எனினும் பல வண்ண உதிரிப் பூக்களாகிய பாக்களால் திருமாலின் பெருமையைப் போற்றுகிறார். அவை இறைவனுடைய திருவுள்ளத்திற்கு மட்டுமல்லாமல் கற்பார் மனத்திற்கும் கழிபேரின்பத்தை அளிக்கின்றன.



# எந்நாட்டவர்க்கும் இறைவன்

இறைவன் தன்னைச் சரணம் என்று வணங்கும் பக்தர்களை என்றும் விலக்குவதில்லை. அவர்களின் மன உகப்பிற்கு ஏற்றவாறு வந்து அருள் புரிவான். இதைத் தன் மீது கொண்ட பக்தியில் ஆழ்ந்திருந்த ஆழ்வார்களுக்குத் திருமால் செய்த திருத்தொண்டுகள் வழி அறியலாம். அவன் அவர்களுக்கு எளியோனாய்த் தோன்றி ஆட்கொண்டான்.

ஆழ்வார்களை மட்டுமின்றி தன் மீது ஆராக் காதல் கொண்ட பெண்களையும் திருமால் ஆட்கொண்டுள்ளான். அதற்கு எடுத்துக்காட்டாக விளங்குபவர்கள்தான் நம் தமிழ் வைணவர் வரலாற்றில் சிறப்பிடம் பெற்று விளங்கும் சூடிக்கொடுத்த நாச்சியார், உறையூர் நாச்சியார், இளை நாச்சியார், துலுக்க நாச்சியார் எனும் நால்வர். அவர்கள் இறைவன் மீது காதல் கொண்டு அவனை ஒருபோதும் மறவாமல்—பிரியாமல் இருக்க உறுதி பூண்டவர்கள். அவர்களின் மாறாக் காதலைக் கண்ட இறைவன் அவர்களைப் பிரிவுத் துயரில் ஆழ்த்த மனம்ஒப்பாமல் எளியோனாய் வந்து அவர்களை மணந்தான். எனவே தென்னாட்டுக் கன்னியரையன்றி வடநாட்டு துலுக்க நாச்சியாரையும் மணந்ததால் திருமால் எந்நாட்டவர்க்கும் இறைவனானான். இனி இதை விளக்க இக்கட்டுரை தொடர்கிறது.

சூடிக்கொடுத்த நாச்சியார்

உலகியலில் உறங்கிக்கிடந்த ஆழ்வார்களை திருமால் எழுப்பினான். ஆனால் இந்நாச்சியாரோ இறைவனையே எழுப்பினாள். இத்தகுச் சிறப்புள்ள இவள் ஆண்டாள் என பெயர் கொண்டவள். பாண்டிய நாட்டில் இருந்த ஸ்ரீவில்லிபுத்தூரில் தோன்றினாள். பெரியாழ்வார் அவளைத் துளசி வனத்திடையே துலங்கா மணிவிளக்காகக் கண்டார். இறைவன் பிரசாதம் என்று எண்ணி குழந்தை ஆண்டாளை எடுத்து வந்து வளர்த்தார். அவள் இறைவன் பெயர்களையும் திருவிளையாடல்களையும் கேட்டு இன்புற்று அவனையேமனத்திடை மனனம் செய்தாள். இறைவனுக்குச் சூடும் மாலையைத் தான் சூடி மகிழ்ந்தாள். இறைவனும் அம்மாலையே வேண்டுமெனக் கேட்டு அணிந்து மகிழ்ந்தான. கோதை 'சூடிக்கொடுத்த நாச்சியார்' என அன்றிலிருந்து அழைக்கப்பட்டாள்.

பருவம் அடைந்த அவள் இறைவனை அணைய இது ஒன்றே வழி என அறிந்து அன்று மார்கழி நோன்பை நோற்று, "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம். மற்றை நம் காமங்கள் மாற்று" என்று கூறித் திருப்பாவை பாடியருளினாள். ஆனால் இறைவன் தாமதம் செய்தான். 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று ஆண்டாள் உறுதி பூண்டாள். பலவாறு இறைவனைப் பாடித் தன் காதல் துயரை பரமனிடம் முறையிட்டாள். அவ்வாறு தோன்றியதுதான் நாச்சியார் திருமொழி.

மகளின் துயர் கண்ட பெரியாழ்வார் இறைவனிடம் தம் கவலையை முறையிட்டார். ஆழ்வார் கனவில் இறைவன் தோன்றி ஆண்டாளை மணப்பதாக உறுதியளித்தான. ஆழ்வார் ஸ்ரீவில்லிபுத்தூரை மணக்கோலமாக அலங்கரித்தார். இறைவன் வடபத்திரசாயி கோவிலில் எழுந்தருளி ஆண்டாளின் கரம் பிடித்து மணந்தான்; மக்கள் அனைவருக்கும் காட்சி தந்து ஆண்டாளுடன் திருவரங்கம் சென்றான். இன்றும் ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளும் அரங்கனும் எழுந்தருளி உள்ளனர்.

உறையூர் நாச்சியார் :

சோழநாட்டின் தலைநகரமான உறையூரை தர்மவர்மா எனும் மன்னன் ஆண்டு வந்தான். நீண்ட நாட்களாக மகப்பேறு இல்லாத அவனுக்கு ஒரு பெண்குழந்தைபிறந்தது. அதுதிருமகளின் அம்சம். அவளை மன்னன் மிக்க அன்புடன் வளர்த்துவந்தான். அவள் சிறு வயதிலிருந்தே திருமால் மீது அன்பும் பக்தியும் கொண்டு வளர்ந்தாள். அவள்தான் உறையூர் நாச்சியார். ஒரு நாள் அவள் சோலையில் தன் தோழியருடன் விளையாடிக் கொண்டிருக்கும்போது வேடன் கோலத்தில் அரங்கன் அங்கு வந்தான். அவ்வழகிய மணவாளனைக் கண்ட அவள் அன்று முதல் அவன் மீது காதல் கொண்டு நெஞ்சைப் பறி கொடுத்தாள். பருவம் வந்த தன்

திரு. சாந்தாடி சதாசிவன்
*திருப்பதி.*

மகளுக்கு மன்னன் வரன் தேட முற்பட்டான். அதை அறிந்த நங்கை அழகிய மணவாளனையே மணப்பேன் என்று தன் உறுதியைக் கூறினாள். மன்னன் மகளின் நிலையறிந்து இறைவனிடம் தன் விண்ணப்பத்தை வெளியிட்டான். அரங்கன், 'மணந்துகொள்வோம், நமக்கே தாரை வார்த்துக் கொடும்' என்றருளினான். அகமகிழ்ந்த மன்னன் அரங்கத்தை விழாக்கோலமாக்கினான். அரங்கன் வந்து நாச்சியாரை மணந்தான். அவள் அரங்கனுடன் இரண்டறக்கலந்தாள்; அவள் எண்ணம் நிறைவேறியது. இன்றும் அவள் உறையூரில் கோவில் கொண்டு உறையூர் நாச்சியாராக அருள் புரிகிறாள்.

(36-ம் பக்கம் பார்க்க)



# வைகுந்த ஏகாதசி





**முன்னுரை :**

"நாள் செய்வதை நல்லோரும் செய்யார்" என்பது தமிழ்ப் பழமொழி! நன்னாட்களை மங்கள நாட்கள் என்றும், புண்ணிய நாட்கள் எனவும் ஒரு வகையாகப் பிரிக்கலாம்.

மாதங்களில் இராமன் அவதரித்த சித்திரை மாதத்தையும், கண்ணன் புகழ்ந்த மார்கழியையும் சிறந்த மாதங்கள் என்பார்கள். அவ்வாறே நக்ஷத்திரங்களில் "திரு" என்ற சிறப்புச் சொல்லுடன் கூடிய திருவாதிரையையும், திருவோணத்தையும் சிறப்பிப்பார்கள்.

நாட்களில் புதனும், ஞாயிறும் ஒரு வகையில் சிறந்தவைகள். அவ்வாறே திதிகளில் ஏகாதசியையும், துவாதசியையும் புண்ணிய நாட்களாக அழைப்பார்கள். ஒரு நோயாளிக்கு ஒரு பெரியவர்—அவன் நோய் குணமடைய "பக்ஷம் இரண்டு" என்றுராம்! அதாவது வளர்பிறை—தேய்பிறைகளில் வரும் பக்ஷங்களில் (பதினைந்து நாட்களில்) ஏகாதசியிலும் துவாதசியிலும் உபவாசம் இருந்து திருமாலை வணங்கி நின்றால்-உடல் நோய், உள்ள நோய், ஆன்ம நோய் என்ற எல்லா நோய்களும் தீரும் என்பது இதன் பொருள்.

**ஏகாதசியின் பிரிவுகள் :**

ஒவ்வொரு மாதமும் வளர்பிறை தேய்பிறை என்ற இரு பருவங்கள் மாறி மாறி வருகின்றன. வளர்பிறையில் சூரிய மண்டலத்திலிருந்து கலைகள் சந்திரனை அடையும். தேய்பிறையில் சந்திர மண்டலத்தின் கலைகள் ஒவ்வொன்றாக சூரியனை அடைகின்றன என்பர். இதற்கு ஹரிவாஸரம், ஹரிதிநம் என்றெல்லாம் பெயர்களாகும்.

எட்டு வயதிற்கு மேற்பட்டவர்களும், எண்பது வயதிற்குட்பட்டவர்களும் ஏகாதசி விரதம் அனுஷ்டிக்க வேண்டும் என காத்யாயன ஸ்மிருதி கூறுகிறது.

" ஏகாதசீ வ்ரதம் பக்த்யா ய:<br>
கரோதி நர: ஸதா!<br>
ஸ விஷ்ணு லோகம் வ்ரஜதி<br>
யாதி விஷ்ணோ: ஸ்ருபதாம்!"

எவனொருவன் ஏகாதசி விருதத்தை விடாமல் தொடர்ந்து அனுஷ்டிக்கிறானோ அவன் திருமால் உலகம் சென்று விஷ்ணுவின் நிலையை அடைகிறான் என்று தத்துவஸாரம் என்ற நூல் கூறுகிறது.

ஏகாதசிக்குமுதல்நாள் தசமிஅன்று பகலில் ஒரு வேளை மட்டும் உணவை உண்டு, ஏகாதசி அன்று சுத்தப்பட்டினி இருந்து, இரவு உறங்காமல் திருமால் சரிதங்களை – பாடல்களைப் படித்தோ அல்லது கேட்டோ இருந்து-மறுநாள் காலையில் துவாதசியில் அதிகாலையில்–உப்பு, புளிப்பு முதலிய சுவையற்ற முதல் உணவாக–சுண்டைக்காய், நெல்லிக்கனி, அகத்திக் கீரை இவைகளைச் சேர்த்துப் பல்லில் படாமல் "கோவிந்த - கோவிந்தா!" என்று மூன்று தடவை கூறி முதலில் ஆல இலையிலோ அல்லது பேத்தி இலையிலோ உணவு இட்டு சாப்பிட்ட பிறகு விரதத்தை – பாரணையை முடித்து அன்றும் பகலில் உறக்கமின்றி இருக்க வேண்டும் என்பார்கள்.

இந்த ஏகாதசிக்கு வரும் மாதங்களை இட்டுப் பற்பல பெயர்கள் உண்டு. கண்ணனே ஏகாதசியின் சிறப்பைக் கூறியுள்ளார் அவைகளில் முக்கியமானவை வஞ்சுளா ஏகாதசி, கைசிகஏகாதசி இந்த ஏகாதசி கார்த்திகை வளர்பிறை ஏகாதசியாகும்; இதனை உத்தான ஏகாதசி எனவும் கூறுவதுண்டு.

**திரு வி எஸ். சீனிவாசன்.**
**தஞ்சாவூர்.**

மார்கழி சுக்கிலபக்ஷ வைகுந்த ஏகாதசி — ஆடி சுக்கில பக்ஷ கோபத்ம விரதம் சிறந்தது. கைசிக ஏகாதசி அன்றுதான் பாரத யுத்தத்தில் பீஷ்மர் சரதல்பத்தில் படுத்தார். இன்று நெல்லை மாவட்டம் திருக்குறுங்குடியில் வாழ்ந்த நம்பாடுவான் என்னும் விஷ்ணு பக்தர்—கைசிகப் பண்ணில் திருமாலை வழிபட்டுத் தன்னை உண்ணவந்த பிரும்ம ராக்ஷதனைக் காப்பாற்றித் தானும் பரமபதம் அடைந்தார்.

வைகுந்த ஏகாதசியை 'வைதரணி' விரதம் என்றும் கூறுவதுண்டு. சிலர் இந்நாளில் பசுவின் வாலைப் பிடித்துக் கொண்டு, தர்ப்பணம் முதலியன செய்வார்கள். இன்றும் இவ்வழக்கம் நடைமுறையில் உள்ளது.

**கோஷ்டீப்ரதீபம் :**

ஏகாதசியில் பிறந்தவர்களின் குண நலன்களைப் பற்றி கோஷ்டீப்ரதீபம் என்ற வடமொழி நூல் கூறுவதாவது "ஏகாதசியில் பிறந்தவன் கோபத்தை அடக்கஇயலாதவன். ஆனால் துன்பங்களைத் தாங்கும் திறன் உள்ளவன்; பேச்சுத் திறன் உள்ளவன்; வைதிக நெறியில் பற்றுள்ளவன்; நல்ல அறிவு உள்ளவன்; தெய்வபக்தி, குரு பக்தியுள்ளவன்."

ருக்மாங்கத மன்னன் அரசாளும் பொழுது, தம் நாட்டு மக்கள் அனைவரும் தவறாமல் ஏகாதசி விரதம் இருக்க வேண்டுமென்று கண்டிப்பாக உத்திரவிட்டான் என நாரத புராணம் கூறுகிறது. ஆவணி கிருஷ்ண ஏகாதசிக்கு "காமிகா" எனவும் சுக்கில ஏகாதசிக்கு "புத்ரதா" எனவும் பெயர்.

**துவாதசி :**

ஏகாதசி உபவாஸத்தை முடித்துப் பாரணை புரியும் நாளே துவாதசியாகும். இந்தப் பாரணைதான் ஏகாதசி உபவாஸத்தின் முக்கியப் பகுதியாகும். துவாதசியுடன் சிரவண நக்ஷத்திரமும் சேர்ந்தால் அதனை



நம்மாழ்வார்.

சிரவண துவாதசி என்பார்கள். இந்த நாளில் மேலும் உண்ணா நோன்பைக் கைக்கொள்வார்கள். அன்று புதன் கிழமையும் கூடினால் மிகவும் சிறப்பு என்று பவிஷ்யோத்தர புராணம் கூறும்.

துவாதசியின் முதல் பகுதிக்கு ஹரி வாஸரம் என்று பெயர். பங்குனி மாத வளர்பிறைத் துவாதசிக்குக் கோவிந்த துவாதசி என்று பெயர். துவாதசிகளுள் இதற்கு மிகுந்த ஏற்றம் உண்டு. துவாதசியின் மகிமையை வராக புராணம் நன்கு சித்தரிக்கிறது. தவிர, ஸ்ரீ பாகவத புராணத்தில் ஒன்பதாம் ஸ்கந்தத்தில் அம்பரீஷன் கதையைக் கூறிய சுகப்பிரும்மம் துவாதசியின் ஏற்றத்தை நன்கு உணர்த்தினார். இது எட்டு வகையாகும்.

அவையாவன—"உந்மீலினி, வஞ்சுளி, த்ரிஸ்ப்ருசா, பக்ஷவர்த்தினி, ஜயா, விஜயா, ஜயந்தி, பாபநாசினி.

**வைகுந்த ஏகாதசி :**

மார்கழி மாத வளர்பிறை ஏகாதசிக்கு "வைகுந்த ஏகாதசி" எனப் பெயர். எல்லா ஏகாதசிகளிலும் விஷ்ணுவை வழிபடுவதுதான் வழக்கம் என்றாலும் இந்த ஏகாதசிக்குச் சிறப்பாக விஷ்ணுவின் சம்பந்தம் கூறப்பட்டதால் வைகுந்த ஏகாதசி எனப் பெயர் ஏற்பட்டது போலும்!.

ஆகம முறைப்படிக்குத் திருமால் ஆலயங்களில் நடக்கும் பஞ்ச பருவ உத்ஸவங்களில் ஏகாதசி உத்ஸவமும் ஒன்று. பாஞ்சராத்திர ஆகமத்தில் ஈச்வர ஸம்ஹிதையின் 246-வது செய்யுளில் இந்த ஏகாதசியில் உபவாஸப் பெருமை கூறப்படுகிறது திருமாலை வழிபட்டு இறைவனுக்கு நைவேத்தியம் ஸமர்ப்பித்த பின்பு நாலாயிரதிவ்யப் பிரபந்தம் கானம் செய்யவேண்டும் என்பது நியதி.

இந்த வைகுந்த ஏகாதசியின் சிறப்பினை—'கலியுகத்தில் நம்மாழ்வார்க்கு முன்பு—திருநாடு செல்வார் யாரும் இல்லாமையாலே வைகுந்தக் கதவு மூடப்பட்டே இருந்தது. ஆழ்வார் வீடு பெற்ற பின்பே அது திறக்கப்பட்டது என்பதை நினைவூட்டவே—வைகுந்த ஏகாதசி கொண்டாடப்படுகிறது' என்பர்.

அந்த ஆகம முறைப்படிக்கு இன்னும் திருமால் ஆலயங்களில் "இராப் பத்து—பகல் பத்து" என்ற பெரும் திருநாள் அதாவது "அத்யயன உத்ஸவம்"—வைகுந்த ஏகாதசி நடுவில் இட்டு முன்பும் பின்பும் பத்து பத்து நாட்கள் கொண்டாடப்படுகின்றன.



ஸ்ரீ ராமாநுஜர்.

முன்பு நம்மாழ்வார்—ஆழ்வார் திருநகரியில் பெருமானை சிம்மாஸனத்தில் எழுந்தருளச் செய்து—இரு பக்கங்களிலும் திவ்ய பிரபந்தப் பாசுரங்கள் பாட திருவாய்மொழியை எம்பெருமான் முன் அரங்கேற்றினாராம். கடைசியில் ஆழ்வார் எம்பெருமான் திருவடி நிழலை அடைந்தார் என்பர். அதன்பின் திருமங்கையாழ்வார், ஆழ்வார் திருநகரியிலிருந்து ஆழ்வாரைத் திருவரங்கம் எழுந்தருளப்பண்ணி இராப்பத்தாகிய—இந்தத் திருவிழாவைத் திருவரங்கத்தில் பத்து நாட்கள் விடாது நடத்தினார்.

பின்பு இராமானுஜர் திருவரங்கத்திலேயே ஆழ்வாரை பிரதிஷ்டை



ஸ்ரீ நாதமுனிகள்.

செய்து வைகுந்த ஏகாதசிக்கு முன்பு நடக்கும் பத்து நாள் பகல் பத்தில் திருமங்கையாழ்வாரின் நினைவாக அவர் அருளிச் செயலான பெரிய திருமொழி முதலிய பிரபந்தங்களுக்குத் திருவிழா நடத்தினர். இது நாதமுனிகளின் காலத்தில் நடந்தது என்றும் கூறுவார்கள்.

இத்திருவிழாவிற்குப் பிறகு திருவரங்கத்தில் பெருமாள் முன்பு திருமங்கை மன்னன அருளிச் செய்த திருநெடுந்தாண்டகம் என்ற பிரபந்தம் ஸேவிப்பது வழக்கம். ஆழ்வார் இறைவன் திருவடியை அடைந்த இந்த நாளில், ஆழ்வார் திருவடி சம்பந்தம் பெற்றவர்களுக்கு வைகுந்தக் கதவு திறந்து விடப்பட்ட நாளான தால் சிறப்பாக இந்நாளை வைகுந்த ஏதாதசி என அழைத்து வருகிறார்கள்.

திருவரங்கத்தில் இந்தத் திருவிழா விற்கு ஏற்றம் மிக அதிகம். இந்த இருபது நாள் உத்ஸவங்களில் திருவரங்கத்தில் நாதமுனிகளின் உடன் பிறந்தான் மகர்களான கீழையசத்தாழ்வான், மேலுயசத்தாழ்வான் என்ற மகான்களின் வம்சத்தவர்கள் திவ்ய பிரபந்தங்களை அபிநயத்துடன் பாடி வழிபடும் முறையை இன்னும் கண் குளிரக் காணலாம். இவர்களை ''அரையர்கள்'' என்பார்கள்.

வைகுநதமும அதறகுச செலலும வழியும்:

வைகுந்த ஏகாதசியில், வைகுந்தக் கதவு திறக்கப்படுவதால் அந்த வைகுநதம் எது என்றும் அதை அடையும் வழி எது என்றும் சுருக்கமாகக் காணலாம்.

ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்ற மூன்று தேவிகளுடனும், விண்ணுளாருடனும் அமர்ந்திருக்கும் உலகத்தை வைகுந்தம் என்பார்கள். இங்கு பசியோ, தாகமோ, தூக்கமோ, சோகமோ இல்லை. இதனைப் பாட்டுக் கேட்கும் உலகம் என்றும், அபராஜிதா, அயோத்யா, த்ரிபாத்விபூதி, வைகுந்தம், பரமபதம், திருநாடு, நலமந்தம் இல்லாதோர் நாடு என்பார்கள்.

இந்த இருள் தருமா ஞாலமான பதினன்கு உலகங்களைவிட மூன்று மடங்கு பெரியது. இங்குதான் ஒரு பகுதியில் ஸ்ரீகிருஷ்ண பக்தர்கள் செல்லும் ''கோலோகமும்'', மறு பகுதியில் ஸ்ரீ இராம பக்தர்கள் செல்லும் ''ஸாந்தானிக'' லோகமும் உள்ளது எனச் சொல்வார் சிலர். இங்கு யாவும் தூய கலப்பற்ற ஸத்துவ குணத்தால் ஆக்கப்பட்டனவாம்.

இந்த உலகமும் பரமபத நாதன் வீற்றிருக்கும் திருமாமணி மண்டபம் எப்படியிருக்கும் என்றல் சுருக்கமாக, ''ஸ்ரீரங்கத்தைக் காண்!'' என்றே சொல்லலாம். இந்த உலகத்தைச் சுற்றி ''விரஜா'' என்ற விண்ணுறு சூழ்ந்துள்ளது.

மனித இதயத்துக்குப் பக்கம் 101 நாடிகளும், 72,000 சிறு நாடிகளும் உள்ளன. அந்த 101 நாடிகளில் ஒரு நாடி மட்டும் இதயத்திலிருந்து உச்சந்தலை நோக்கிச் செல்லுகிறது. அதன் வழியே இந்த ஆன்மா—தன கர்ம வினையுடன் வெளிக் கிளம்புகிறது. அப்பொழுது எம்பெருமான் கழுத்துக்குப் பின்புறமுள்ள முன்கூட்டிலிருந்து—தாயைக் குழந்தை அணைப்பதுபோல் அணைத்துக் கொள்கிறது.

பின் பஞ்ச பூதங்களின் ஸூக்ஷ்ம தத்துவத்தை எடுத்து—ஸூக்ஷ்ம சரீரத்தை உண்டு பண்ணி அதில் இந்த ஜீவாத்மாவைப் புகுத்தி இவன் ''அர்ஸிஸ்'' என்ற தேவதை வழிப் படுத்தவே, எல்லா உலகங்களையும் தாண்டி சூரிய மண்டலத்தைப் பிளந்து—சத்திய லோகம் வழியாக ''விரஜா'' என்னும் ''வைதரிணி'' யைக் கடந்து அங்குள்ள ''ஜீரம் மதீயம்'' என்ற குளத்தில் நீராடி ''ஸோம ஸவனம்'' என்ற அரச மரத்தடியில் இருக்க, அப்ராகிருதமான உடல் பெற்று ஐந்து ஐநூறு பெண்கள் கண் மை, வாசனைப் பொடி, உடுக்க ஆடை, கழுத்துக்கு மாலை முதலியன அணிவிக்கவே, ''அமானவர்கள்'' என்ற வைகுந்தப் புருஷர்கள் வந்து ''திருமாமணி மண்டபம்'' அழைத்துச் செல்கிறார்கள்

அங்கு ஸ்ரீமந் நாராயணனும் திருமகளும் கண் குளிர அழைத்து வந்து மடியில் இட்டு குசலம் விசாரித்து விண்ணுள்ளோர் கூட்டத்தில் அமர்த்தி விடுகிறார்கள். ''நசபுநராவர்த்ததே—நசபுநராவந்த்ததேஸ! ஸ்வராட்பவதி'' என மறையோதிய படி, இந்த மாயா உலகத்தில் வினையடியாகத் திரும்பாத முக்தர்கள் ஆகிறார்கள். இத்தகைய வைகுந்த ஏகாதசி—இந்த ஆண்டு 7-1-1990 திங்கட்கிழமை வருகிறது. அன்று அடியார்கள் நோன்பு நோற்று அரங்கனை வணங்கி பேறு பல பெறுவோமாக!

''வைகுந்தம் புகுதலும்
வாசலில் வானவர்
வைகுந்தன் தமர் எமர்
எமதிடம் புகுகென்று
வைகுந்தத்தமரரும் முனி
வரும் வியந்தனர்
வைகுந்தம் புகுவது
மண்ணவர் விதியே''

—நம்மாழ்வார்.



ஓம் ஸ்ரீ மாத்ரே நம :





# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி

ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய சாதனங்கள்.

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) $6\frac{1}{4} \times 6\frac{1}{4}$ செ. மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்த்து வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும், எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தை உண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்து வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ.(கோல்டுபிரேம்)மேற்கண்டபலனைத் தரவல்லது | 500-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகளை நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வல்லது | 150-00 |
| 18. | தத்தாத்ரேயர், விக்ன கணபதி, ம்ருத்யஞ்யம் (சர்வ ஜெய யந்த்ரம்) 8×24 செ.மீ. இந்த மூன்று யந்திரங்கள் சேர்த்து ஆகாயத்தில் செல்லும் விமானம் முதல லாரி கார் வரை கண் திருஷ்டியால் ஏற்படும் விபத்தைத் தவிர்க்கவல்லது. | 500-00 |

19. இன்னும் பலவிதமான டாலர்கள், மாலைகள் அனைத்தும் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டன.

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும். மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

போன் : கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254


" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "

# உள்ளம் பெருங் கோயில்

மருத்துவ முன்னேற்றம், நாகரிக வசதிகளும் பெருகியுள்ள இந்நாளில் அறுபது வயதை தாண்டுவதே அரிதாக உள்ளது! ஏன் இந்த அவலநிலை? இதற்கு முக்கிய காரணம் என்ன? மனத்தில் உற்சாகமின்மை உடலளவில் பலவீனத்தை ஏற்படுத்துகிறது. உடல் பலத்திற்கு மனோ பலம் மிக முக்கியம். மன தைரியத்தை இழந்தவன், சீக்கிரமே மரணமடைகிறான்.

வாழ்க்கையில் அவசியம் உள்ளது, இல்லாதது எல்லாவற்றையும் மனிதன் தெரிந்து கொள்கிறான். எதை அறிந்து கொள்ள வேண்டும், எது தேவையில்லாதது என்று பகுத்தறியும் உணர்வு செயல்பாடு இல்லாது போகிறான். தேவையில்லாதவற்றை எல்லாம் மனிதன் தன் மூளையில் சேர்த்துக் கொள்கிறான். அதனால் மனத்திலும் அழுக்குப்படிகிறது.

திரு. சோ. ரங்கசுவாமி,
நாட்டரசன்கோட்டை.



ஆதி கும்பேஸ்வரர் கோயில் - குடந்தை.
எஸ். ஜி. சேஷகிரி - கோவை.

"உள்ளம் ஒரு கோயில்" அவ்வுள்ளத்தை தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று சாதாரண அறநெறியாளர் முதல் அளவுக்குள் அடங்காத பெரிய சித்தர்வரை வலியுறுத்திச் சொல்லி வந்துள்ளார்கள். "மனமது செம்மையானால் மந்திரம் ஜெபிக்க வேண்டாம்" என்று மனத்தின் செம்மையை வலியுறுத்தி கின்றனர்.

மனத்தின் செம்மை என்று பார்க்கும் போதே 'பூசலார் நாயனார்' கதை அனைவர் நெஞ்சிலும் நிறைந்து இருக்கும்.

சோழ மன்னன் ஓர் சிவாலயம் கட்டத் தீர்மானித்தான். மந்திரி பிரதானிகளுடன், பரிவாரங்களுடன் சிவாலயம் கட்ட தொடங்கிவிட்டான். மனத்தையே ஆண்ட மஹா உத்தமர் 'பூசலார்' ஓர் சிவாலயம் எழுப்ப எத்தனித்தார். எங்கே போவார் பணத்திற்கு! முற்றும் துறந்த துறவிக்கு உதவிட தன் சொத்தை துறந்திட யார் வருவார்!? உத்தமரான 'பூசலார்' தன் மனத்தால் சிவாலயம் கட்டத் தொடங்கி விட்டார்.

"உள்ளம் பெருங் கோயில் ஊன்
உடம்பு ஆலயமாம்
வள்ளல் பிரானுக்கு வாய் கோபுர
வாசல்
தெள்ளத் தெளிந்தாருக்கு ஜீவன்
சிவலிங்கம்
கள்ளப்புலன் ஐந்தும் காலான்
மணி விளக்கே"

என்ற திருமூலர் திருமந்திரத்திற்கு ஏற்ப 'பூசலார்' உள்ளம் எனும் கோவிலிலே இறைவனை உறைய வைத்தார்.



**உபயநாச்சிமார்களுடன் ஸ்ரீ வேங்கடேஸ்வரர்.**

இருவரின் சிவாலயமும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர ஆரம்பித்தது. கோவில் வேலைகள் அனைத்தும் முடிந்து விட்டது. சாஸ்திர ஆகமவிதி ஏதும் பிறழாமல் முறையாக மன்னவன் கோவிலைக்கட்டி முடித்தார். முற்றும் துறந்த துறவியும் தன் சித்தத்தில் சிவாலயத்தைக் கட்டி முடித்தார். கருவறையில காத்திருக்கிறார் இறைவன். ஆகமவிதி முறைப்படி கும்பாபிஷேக நாளும் குறித்தாகிவிட்டது. ஸ்திரமாக கோவில்கள் கொலுவீற்றிருக்க ஸ்திர லக்னத்தில்தான் கும்பாபிஷக நாள் குறிப்பார்கள். சிவன் கோயில் ஆயிற்றே! ஸ்திர லக்னமான ரிஷப லெக்னத்தில் கும்பாபிஷேகநேரம் குறிக்கப்பட்டுவிட்டது. லெக்ன கால நேரத்தில் தொடக்கம் முதல் ஓர் நாழிகை உதய லெக்னம் என்ற அஸ்தமனம் இல்லாத ஓர் சிறப்பு அமைப்பு என்பதால் இருவருமே அதே நாழிகையை தத்தம் கோவிலின் கும்பாபிஷேக நேரமாக கருத்தில் கொண்டனர்.

தன் சித்தத்தைக் கட்டி சிவன் கோயில் எழுப்பிய பூசலாருக்கு முக்கியத்துவம் அளிக்க எண்ணிய ஈசன் சோழ மன்னன் கனவில் தோன்றி தான் முதலில் பூசலார் கோயிலுக்கு எழுந்தருள இருப்பதால் அவன் கும்பாபிஷேக நாளை மாற்றி அமைக்கச்சொன்னார்.

ஈசனே மெச்சும் கோயிலை தரிசனம் செய்ய வேண்டும் என்று நினைத்த மன்னவன், பூசலார் ஊர் வந்துசேர்ந்தான். அங்கே எந்தக் கோவிலும் எழும்பாததைப்பார்த்துதிகைத்தான் பிறகு பூசலார் தன் மனத்தால் கட்டிய கோயில் என்பதை அறிந்து மிகவும் ஆச்சரியம் அடைந்தான்!! தன் மனத்தில் கட்டிய கோயிலுக்கு மகேஸ்வரன் மகிழ்ந்ததால் 'பூசலார்' என்ற பெயர் 'பூசலார் நாயனார்' என்று சிறப்புப் பெற்றது.

இந்த பூவுலகில் எண்பத்து நான்கு லட்சம் உயிரினங்கள் வாழ்கின்றன. அவற்றுள் ஒன்றுதான் மனிதப் பிறவி. "பெறுதற்கரிய பிறவியைப்பெற்றும்" நாம் இறைவன் உறையும் மனத்தை மாசு இல்லாமல் வைத்துக்கொள்ள இயலவில்லை.

மனத்தை நல்ல நினைவுகளில் வைத்திருப்பதே சிறப்பான புண்ணியம் என்பதை வலியுறுத்த கர்ண பரம்பரை கதை ஒன்று உள்ளது.

பரம ஏழை ஒருவனுக்கு தன் பாட்டனார் பூர்வீகச் சொத்தான காணி நிலம் தவிர வேறு வகையில்லை. கஷ்ட நிலை தீர தன் ஜாதகம் சாதகமாக உள்ளதா என அறிய பக்கத்தில் உள்ள பண்டிதரிடம் காட்ட நினைத்தான். பண்டிதரின் வீடோ பக்கத்தில் இல்லை. பதினைந்து மைல்தொலைவில் உள்ளது.

பஸ் வசதியில்லாத அந்தக்காலம். வேலைகளை எல்லாம் முடித்துவிட்டு தன் ஜாதகத்தை எடுத்துக் கொண்டு பொடிநடையாகக் கிளம்பிவிட்டான். பண்டிதரிடம் ஜாதகம் கிரக ஆய்வு செய்யப்பட்டது. பண்டிதருக்கு பரம சங்கடமாகபோய்விட்டது. கொடுத்த ஜாதகத்தில் கடுமையான 'விஷகண்டம்'. திசை, புத்தி, அந்த

ரத்தை கணக்கிட்டுப்பார்க்கும்போது துல்லியமாக அன்று இரவுக்குள் பாம்பு தீண்டி மாண்டுபோகும நிலே. இந்த தோஷத்திற்கு பரிகாரம் பார்க்கும்போது ஸ்ரீமந் நாராயணனை ஆதி சேஷனுடன் பள்ளிகொண்ட பெருமாளாக எழுந்தருளச்செயது கோவில் கட்டினால் விஷ கண்டத்திலிருந்து தப்பிக்கலாம் என்றும், இந்த புண்ணியத்தால் ஐஸ்வரியத்துடன் இருக்லாம் எனவும் பரிகாரம் விதி இருந்தது.

பரம ஏழை பரந்தாமன் கோவிலை எப்படிக் கட்ட முடியும்? இன்றுஇரவு நடக்கவிருக்கும் விஷகண்டத்தை எப்படி விவரிப்பது? பண்டிதருக்கு தர்ம சங்கடமான நிலே. ஒருவாறாக மனதை சமாதானம் செய்துகொண்டு சாமர்த்தியமாக அந்த ஏழை விவசாயிடம் "நாளை காலே சூரிய உதையத்திற்கு பின் இங்கு வாருங்கள், விபரமாக பலன் சொல்கிறேன்" என்றார். சூரிய உதையத்திற்கு முன்பு விஷகண்டத்தால் உயிர் போய்விடும் என்பது அவரின் கணிப்பு.

ஏழை விவசாயியும் மனத்தாங்கலுடன் ஊர் திரும்பினான். பாதி தூரம் வரும்போதே காற்றும், மழையும் ஆரம்பித்தது. இந்நிலையில் பயணத்தைத் தொடர்வது நல்லதில்லை என்று தீர்மானித்து, பக்கத்தில் உள்ள பாழடைந்த மண்டபத்தில் பொழுதை கழித்துவிட்டு ஊர் செல்லலாம் என தீர்மானித்து மண்டபத்தை அடைந்தான். மண்டபத்தை அடைந்ததும் அது ஒரு சிதிலடைந்த பெருமாள் கோவில் எனத் தெரியவந்தது.

மழையை நமபிய விவசாயம். அவனது. 'வானம்பார்த்தபூமி'என்பதால் மழையில்லாத காலத்தில் வயிற்றுப் பிழைப்புக்காகக் கட்டிடக் கொத்து வேலேக்கு சென்று பழக்கப்பட்டவன். ஓரளவு கட்டிடம் சம்மந்தமாக பரிச்சயம் உண்டு. பொழுது போகவில்லே. தனக்குத் தெரிந்த சொற்ப கட்டிடக் கலே ஞானத்தை வைத்து இடிந்த கோவிலே எப்படி எப்படியெல்லாம் கட்டி முடிக்கலாம் என தீர்மானிக்கத் தொடங்கிவிட்டான். மானசீகமாக ஒவ்வொரு பாகமாக கட்டி முடிக்க தீர்மானம் செய்து கோவிலே முடிப்பதற்குள்மழையும்ஒய்ந்தது. பக்கத்தில் பாம்பு சென்ற தடயங்கள் இருப்பதை அப்போதுதான் பார்த்தான். பிறகு தம் ஊர் சென்று பண்டிதர் கூறியது போல் மறுநாள் வந்து சேர்ந்தான் !?

பண்டிதருக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. தான் தவறுதலாகக் கணக்கு போட்டுவிட்டோமே என்ற வருத்தம். மறுமுறையும் கிரக ஆய்வு செய்தார். முந்தைய நாள் நிலேமை தான். பின்பு இவர் எப்படி விஷகண்டத்திலிருந்து தப்பித்தார் என்று புரியவில்லே விபரம் அறிய அன்று நடந்ததைக் கேட்டார். ஏழை விவசாயி நடந்ததை அனைத்தையும் அப்படியே கூறினார்.

அந்தரங்கமாக அரங்கனின் கோவில் கட்டுவதாக நினைத்த மாத்திரமே விஷகண்டம விலகியதை நினைத்த பண்டிதர் புளகாங்கிதம் அடைந்தார். பரிகார நிவர்த்தியில் விவரித்தபடி கோவிலே கட்டினால் விஷகண்டம் நீங்கியதோடு ஐஸ்வரியத்துடன் இருப்பான் என்பதற்கேற்ப இன்று முதல் சுகமாக வாழ்வாய் எனறு ஜாதகப்பலனைக் கூறி முடித்தார். விவசாயி அதுபோல் ஐஸ்வரியத்துடன் வாழ்ந்து வந்தான்.

கோபுரம் என்பது ஜீவபுரம். ஜீவபுரம் நம் தேகங்களின் நடுநாயகம். கோபுரத்தை தாண்டி கர்ப்ப கிருகத்தில் இருக்கும் அந்த நாயகனே மூலவர்.

ஓர் அலுவலகத்தில் கடிகாரம் மாதிரி மணிக்கணக்குப் பிரகாரம் வேலே செய்தவன் ஒய்வு பெற்றதும் மனதளவில் ஏற்படும் உற்சாகத்தை இழந்துவிடுகிறான். ஒய்வு பெற்றதும் தன்னை யாரும் முன்போல் மதித்துக் கௌரவிப்பது இல்லே என்ற எண்ணம் வந்துவிடுகிறது. உத்யோகம் பார்ப்பவர்கள்கூட இரண்டுபேரும் ஒரே அலுவலகத்தில் ஒரே அளவு வருவாய் பெற்றாலும் இவர்களின் வாழ்க்கை ஒன்றாகவே அமைவதில்லே. இந்த மாறுபாட்டிற்கு அவர்களின் மனநிலே முக்கிய காரணம் ஆகும்.

உள்ளத்தை உற்சாகமாக வைத்திருப்பது என்பது மனக்கோட்டை கட்டிக்கொண்டு இருப்பதோ அல்லது பகல் கனவு கண்டுகொண்டு இருப்பதோ என்பது பொருள் ஆகாது. உள்ளம் எனும் கோயிலில் உறையும் இறைவன்பால் மனத்தை ஒடுக்குவதே, மனத்தை ஒருமுகப்படுத்துவதே உணமையான உற்சாகமாகும். இதைவிடுத்து நாகரீம் என்று அநாகரியத்தில் அமிழ்ந்து, மனம்போன போக்கில் சென்று மன நோயாளியாகத் திரியும் நிலேயைத் தவிர்ப்போம்.



டாக்டர். டி. ஜி. அனந்தசுப்ரமணியன்,
திருப்பதி.

பன்னிரண்டு மாதங்களில் மார்கழி மாதத்திற்குத் தனிச் சிறப்பு உண்டு. அதற்குக் காரணம் என்ன? அதைப் பற்றிச் சிறிது பார்ப்போம்.

நாம் சொல்லிக் கொண்டிக்கும் மார்கழி என்ற மாதத்திற்கு மார்கசிரம் என்றும், தனுர்மாஸம் என்றும் பெயர்களுண்டு. ஆனால் இந்த இரண்டு பெயர்களுக்கும் வேறுபாடு உண்டு. சந்திரனைக் கொண்டு கூறும் மாதம் மார்கசிர மாதம், ஸூர்யனைக் கொண்டு கூறும் மாதம் தனுர்மாதம் என்றும் சொல்லப்படுகிறது.

ஒரு வருஷத்திற்கு ஆறு ருதுக்கள் உண்டு. இவைகளை பருவங்கள் என்று கூறுவர். ஒவ்வொரு ருதுவும் இரண்டு இரண்டு மாதங்களைக் கொண்டது. அதாவது சித்திரை—வைகாசி வஸந்தருது, ஆனி-ஆடி கிரீஷ்மருது, ஆவணி-புரட்டாசி வர்ஷருது, ஐப்பசி-கார்த்திகை சரத்ருது, மார்கழி-தை ஹேமந்தருது, மாசி-பங்குனி சிசிரருது.

இந்த மார்கழி மாதத்தை மார்கசிரம் என்று கூறுவது வழக்கு. ஆனால் தற்காலத்தில் வழங்கி வரும் முறை சூரியனை வைத்துச் சொல்லக் கூடிய மாதமான தனுர்மாதத்தைச் சொல்லுகிறோம். அதாவது மாதங்களை சாந்த்ரமானம், சூரியமானம் என்று இரண்டு விதமாகப் பிரிக்கலாம். சாந்த்ரமானமென்றால் ஒவ்வொரு அமாவாசையின் மறுநாளான பிரதமையிலிருந்து பௌர்ணமியின் முதல் நாளான சதுர்தசி வரை ஒரு மாதம். இந்த முறையில் சைத்ரம், வைசாகம் என்று மாதங்களுக்குப் பெயர்கள் வந்தன. இந்த பெயர்களையே தமிழில் சித்திரை, வைகாசி என்று கூறுகிறோம்.



அதே போல் சூரியன் ஒவ்வொரு ராசியில் சஞ்சரிக்கும்பொழுது அந்தந்த ராசியின் பெயர்களையே அந்தந்த மாதங்களுக்குப பெயராகும். அதாவது மேஷம், ரிஷபம் என்று. இதையையே தமிழில் சித்திரை, வைகாசி என்றும் அழைக்கிறோம்.

இப்பொழுது மார்கழி என்றால் (மார்கசிரம்) கார்திகை மாத அமாவாசைக்கும் மறுநாளிலிருந்து மார்கழி மாத பௌர்ணமிக்கு முதல் நாள் வரை உள்ள நாட்களை மார்கழி (மார்கசிரம்) என்று அழைக்க வேண்டும். தனுர்மாஸம் என்றால் தற்காலம் மார்கழி என்று அழைக்கப்படும் மாதம் (அதாவது போகிப் பண்டிகை வரை)

இந்த தனுர் மாதத்தைதான் "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள்" என்று ஆண்டாள் திருப்பாவையில் குறிப்பிடுகிறாள்.

இந்தக்கணககு பாகவதத்தில் பத்தாவது ஸ்கந்தத்தில் 21-வது அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது. மேலும் இந்த கணக்குப்படி வரும் மாதம்தான் தனுர் மாதம் என்பது. இந்த தனுர் மாதத்தில் என்ன செய்ய வேண்டுமென்பதையும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த தனுர் என்பது ஹேமந்த ருது (குளிர் காலம்) வின முதல் மாதத்திற்குப் பெயர்.

"हेमन्ते प्रथमे मासि नन्दव्रजकुमारिकाः ।
चेरुर्हविष्य भुञ्जानाः कात्यायन्यर्चनव्रतम् ।।

आप्लुत्याम्भसि कालिन्द्याः जलान्ते चोदितोऽरुणे।
कृत्वा प्रतिकृतिं देवीमानर्चुर्नृप सैकतीम्॥
गन्धैःमाल्यैः सुरभिभि बलिभिः दीधूपदीपकैः।
उच्चावचैश्चोपहारैः प्रवालफलतण्डुलैः॥

ஹேமந்த ருதுவின் முதல் மாஸமான தனுர் மாதத்தில் ஆயர்பாடியில் வசிக்கும் குமரிகளான கோபிகைகள் (குமாரிகள் என்றால்-பதினாறு வயது நிரம்பிய மகளிர் ஆவர்) ஹவிஸ் (கஞ்சி வடிக்காத அன்னத்தைக் குறிக்கும் "பொங்கல்" என்று கூறலாம்) தயார் செய்து உண்டு, காத்யாயனி நோன்பு அனுஷ்டிக்கிறார்கள். எவ்விதம் இந்த நோன்பைச் செய்கிறார்கள் என்றால் காளிந்தீ என்ற யமுனையில் குதித்து தண்ணீரில் மூழ்கி ஸ்நாநம் செய்கிறார்கள். பிறகு அங்குள்ள மண்ணை எடுத்து காத்யாயனி (தேவி)யைப் போல் பொம்மை செய்து அதற்கு நந்தனம், புஷ்பங்கள் இவைகளால் அலங்கரித்து அர்ச்சனை செய்து தூபம், தீபம் இவைகளைக் காட்டி மிகவும் உயர்ந்த பழங்களையும், ஹவிஸ்ஸையும் நிவேதனம் செய்து பூஜிக்கிறார்கள்.

பாகவதக் கருத்தை ஆண்டாள்,

"மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீர் ஆடப்போதுவீர்............
சீர்மல்கும் ஆயப்பாடிச்
செல்வச் சிறுமீர்காள்!"

என்று அழைக்கிறாள்.

மேலும் நோன்பு பற்றிக் குறிப்பிடும் பொழுது ஆண்டாள்,

"நாமும நம் பாவைக்குச் செய்யும கிரிசைகள்
நெய் உண்ணோம்............
பால் உண்ணோம, நாட்காலே நீராடி,
மையிட்டு எழுதோம
மலரிட்டு முடியோம் செய்யாதன செய்
யோம், தீக்குறளை சென்றுரோதோம்"
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும கைகாட்டி,

என்று கூறுகிறாள்.

எதற்காக இந்தப் பெண்கள் குளிர் காலத்தில் இவ்வாறு செய்கிறார்கள்?

कात्यायनि महामाये महायोगिन्यधीश्वरि।
नन्दगोपसुतं देवि पतिं मे कुरु ते नमः॥

"ஹே! தேவியே!! மாமாயையே! எங்களுக்கு நந்தகோபனுடைய மகனைக் கணவனாகக் கொடு" என்று பிரார்த்திக்கிறார்கள். இந்தக் கருத்தை ஆண்டாள்,

"எற்றைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும்
உன் தன்னோடு, உற்றோமே ஆவோம்
உனக்கே நாம் ஆட்செய்வோம்"

என்று வேண்டுகிறாள்.

"इति मन्त्रं जपन्त्यस्ताः पूजां चक्रुः कुमारिकाः।

"மாயனை, மன்னு வடமதுரை மைந்தனை,
......................
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்
தொழுது, வாயினால் பாடி, மனத்தினால் சிந்திக்க"

என்றும் ஆண்டாள் கூறுகிறார்.

பத்ரகாளியைத்தான் தமிழ் இலக்கியங்களில் கொற்றவை என்று கூறப்படுவது. இந்த கொற்றவையை வழிபடுவது என்பது நம் தமிழ் மக்களின் பழைய கால மரபு. சிலப்பதிகார வேட்டுவவரியில் கொற்றவையை வேட்டுவக் குடிமக்கள் போற்றி வழிபடுகிறார்கள். அங்கே கொற்றவையை,

# மார்கழித் திங்கள்

एवं मासं व्रतं चेरुः कुमार्यः कृष्णचेतसः॥
भद्रकालीं समानर्चुर्भूयान्नन्दसुतः पतिः।
उषस्युत्थाय गोत्रैः स्वैरन्योन्याबद्धबाहवः।
कृष्णमुच्चैर्जगुर्यान्त्यः कालिन्द्यां स्नातुमन्वहम्"॥

தனுர் மாதம் முழுவதும் உஷஸ் காலமாகும்.

"उदयात्प्राक् चतस्रस्तु घटिका अरुणोदयः"

சூரியன் உதயமாவதற்கு முன் (நான்கு நாழிகைக்கு அருணோதயமென்று பெயர்) (அதாவது விடியற்காலை எனபது 4-30 மணியாகும்) எழுந்து கண்ணனை நினைத்து தன் ஸகதோழிகளுடன், கைகோத்துக் கொண்டு யமுனை நதியில் ஸ்நாநம் செய்து அங்கிருக்கும் பத்ரகாளியை வணங்கி, எங்களுக்கு கண்ணனையே கணவனாகக்கொடு என்று பிரார்த்திக்கிறார்கள்.

"வெள்ளி எழுந்து, வியாழன் உறங்கிற்று"

என்பது உஷஸ் என்ற காலத்தைக் குறிப்பதாகும.

"சங்கமும் சக்கரமும் தாமரைக் கேயேந்திச்
செங்கண் அரிமால் சினவிடைமேல் நின்றாயால்
கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை உருவாய் மறையேத்தவே நிற்பாய்"

(வேட்டுவவரி வேறு பா. 9-பக். 278) என்று வர்ணிக்கிறார்.

"சங்கினையும், சக்கரத்தையும் தாமரை போன்ற கைகளில் தாங்கி, சிவந்த கண்களையுடைய சிங்கமாகிய சினம் பொருந்திய விடைமீது நின்றாய். கங்கையினை சடை முடியின மேல் அணிந்த நெற்றிக் கண்ணையுடையோனது இடப்பாகத்துப்பெண்ணுருவாகி வேதங்கள் போற்ற நிற்பாய் இது என்ன மாயமோ?"

அதாவது ஒரு நறகாரியம் நடைபெற திருமணம் முதலானவைகள் இடையூறின்றி நடக்க கொற்றவையை வழிபடுவது நம் தமிழ்ப




பண்பு. அதையேதான் கோபிகைகளும்செய்தனர். மேலும் கண்ணனின் சகோதரியல்லவா கொற்றவை! சகோதரி சொன்னால் கண்ணன தட்டவா? போகிறான் என்று எண்ணத்தால் போலும்.

தனக்கு விரும்பியதை இறைவனுக்கும் செய்வதென்பது பக்தர்களுடைய இயல்பு. இராமாயணத்தில் சபரி என்ற வேடுவப் பெண் தனக்குப் பிடித்த பழங்களை ஸ்ரீராமனுக்குக் கொடுத்தாள் என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும்.

ஆண்டாள் தநதை கட்டி வைத்த துளப மாலையை அணிந்து அழகு பார்த்துப் பிறகு கண்ணனுககுப் போட்டுப் பாாத்தாள் என்பது பக்தியை-அன்பைக காட்டுவதாகும். அதேபோல்,

“ அவருள்
வண்டுழாய் மாலையை மாயவன்
மேலிட்டுத்
தண்டாக் குரவைதான் உள்படுவாள-
கொண்டசீர்
வையம் அளந்தான்றன் மார்பின
திருநோக்காப
பெய்வளைக் கையாள் நம் பின்னை
தானுமெற்றே
ஐயென்று ளாயர் மகள்”

அவ்வெழுவர் மகளிருள் வளவிய துளப மாலையினை மாயவனுகிய கண்ணன் தோளின்மீது சாத்தி பரத சாஸ்த்ரப்படி பரதம் ஆடத் தொடங்குவாள். கண்ணனுக்கு அணிவித்த மாலையால் மார்பில் உரைவிடங்கொண்ட திருவை நோக்கவிடாமல் தானே அத்திரு என்று அந்த ஆயர் மகள்தான என்று வியந்தாள்.

இதுபோல் காரியங்கள் குமரிப்பெண்களின் இயற்கையாகும்.

இம்மாதிரியாக மகளிர் தனக்குக் கணவனுகக் கண்ணனே வரவேண்டுமென்று காத்யாயனியை வணங்கி வலம் வருவது இநத மார்கழி மாதத்தின் நோம்பாகக கருதி வந்தனர். ஆகையால் திருமண வயதுப் பெண்கள் இந்த தனுர் மாதத்தில் விடியற்காலையில் இறைவனை வழிபட்டால் நற்கணவனை அடையலாம.

மறறுமொரு விசேஷம. ஆகமங்கள் தனுர் மாதத்தில் காலையில் இறைவனை வழிபட்டால் அதன் பலனைக் கூறுகின்றது ஸ்ரீப்ரச்ன ஸம்ஹிதை என்ற நூல்.

“ कोदण्डस्थे सवितरि यावन्मकरसंक्रमम ।
तावद्दिनेषु प्रत्यूषे भगवन्तं जनार्दनम् ।।
स्तोत्रैरन्यैर्नृत्तगीतैस्तोषयेद्धरिमव्ययम् ।
मुद्गान्नं सघृतं क्षीरं मरीच्यादिसमन्वितम् ।।
सोपदंशं शर्करां च कदलीफलसंयुतम् ।
एवं प्रतिदिनं प्रातर्देवस्य विनिवेदयेत् ।।
द्वादशाब्दार्चनफलं दिनेनैकेन लभ्यते ।
(श्री. प्र. सं. अ. ४६)

தனுர் ராசியில் சூர்யன் சஞ்சரிக்கும்பொழுது மகரஸங்க்ராந்தி வரையில் (அதாவது நாம் மார்கழி மாதம் போகி பண்டிகை நாள் வரை என்பது) விடியற்காலையில் எழுந்து ஸ்நாநம் செய்து தோத்திரங்களாலும்,இசைப்பாட்டுக்களினுலும் வழிபட்டு முத்கான்னத்தை நெய்யுடனும், பாலுடனும், மிளகுடனும், சர்க்கரையுடனும், வாழைப்பழத்துடனும தினமும் நிவேதனம் செய்து வழிபட்டு வந்தால் பன்னிரண்டு ஆண்டுகள் இறைவனை வழிபட்ட பலன் இந்த தனுர் மாதத்தில் ஒரு நாள் செய்யும் பூஜையினுல் பெறலாம். (முத்கான்னம் என்ருல் பாசிப் பருப்பு, மிளகு, சீரகம் கலந்து செய்யும் வெண் பொங்கலுக்குப் பெயர். இதைச் சாப்பிட்டால் உஷ்ணம் தணியும் என்பது கருத்து. (விடியற காலையில் எழுவதால உடலில் உஷ்ணம் தாக்சலாம் என்பதால்).

இந்த மார்கழி மாதத்திற்கு என்ன அவ்வளவு சிறப்பு?

"पुष्यमासादिषण्मासाः देवानां अहरुच्यते ।
आषाढादिकषण्मासाः देवानां रात्रिरुच्यते ॥"
(सिद्धान्तशेखरः काम्यकाण्डं — १९)

தை மாதம் ஆரம்பித்து ஆனி மாதம் முடிய ஆறு மாதங்கள் தேவர்களுக்கு பகலாகும். அதே போல் ஆடி மாதம் ஆரம்பித்து மார்கழி மாதம் (ஸௌரமான முறை) முடிய இரவாகும். இந்த ஆறு மாதங்களில் கடைசி மாதமான தனுர் (மார்கழி) மாதம் முடிய விடியற்காலமாகும். ஆகையால் தக்ஷிணாயனம் என்று சொல்லப்படும் தை மாதம் முதல் ஆனி மாதம் முடிய உள்ள நாட்களில் பகல் நேரம் அதிகம். அதே போல் ஆடி முதல் மார்கழி முடிய உள்ள நாட்களில் இரவு நேரம் அதிகம். இநத ஆறு மாதங்களுக்கு உத்தராயனம் எனக்கூறுவர். மேலும இந்த மார்கழி மாதத்திற்கு மற்றுமொரு சிறப்புமுண்டு.

मार्गशीर्षो देवतानां प्रातःकाल इति स्मृतः।
प्रातः कालो महद्भिस्तु सात्विकः समुदाहृतः॥
तस्मिन्नभिगमे काले पूजनं सात्विकं स्मृतम्।
मुद्गान्नं च गुडान्नं च सात्विकं परिचक्षते ॥

தேவதைகளுக்கு மார்கழி (தனுர்) மாதம் விடியற்காலம் எனறு கூறப்பட்டுள்ளது. அந்த விடியற் வேளை என்பது மிகவும் புனிதமானது. ஆகையால் அந்தக் காலை வேளையில் பூஜைகள் செய்தால் மிகவும் நற்பயன்களை யடையலாம். அவ்வேளையில் பாசிப் பருப்பு கலந்த பொங்கல் அல்லது சர்க்கரைப் பொங்கல் நிவேதனம் செய்யவேண்டும். இதைத்தான் "கூடாரை வெல்லும்" பாடலில் "ஆடை உடுப்போம் அதன் பின்னே பாற்சோறு மூடநெய் பெய்து, முழங்கை வழி வார" என்று ஆண்டாள் கூறுகிறாள்.

ஸ்ரீ வைஷ்ணவ கோவில்களில் அத்யயனோத்ஸவம் என்று ஒரு உத்

# நல்லதும் கெட்டதும்

ஒரு சீடன் குருவிடம் கேட்டான், "நல்லதைப் படைத்த கடவுள் தானே கெட்டதையும் படைத்துள்ளார். அதனால் நல்லதை மட்டும் செய்வதைவிட்டு, கெட்டதையும் ஏற்றால் என்ன?" என்று.

குரு சிரித்துக் கொண்டே "அது அவரவர் விருப்பம்" என்றுகூறி மழுப்பிவிட்டார்.

மதிய உணவு வேளையின்போது ஒரு கிண்ணத்தில் பசு மாட்டுச் சாணத்தை வைத்து சாப்பிடும்படி சீடனிடம் கொடுத்தார், குரு. சீடன் சாப்பிட முடியாது மனம் கலங்கினான்.

"சாணி, பால் இரண்டும் பசு மாட்டிடம் இருந்து தானே கிடைக்கிறது. பாலை ஏற்றுக் கொள்ளும்போது, சாணியை ஏற்றுக்கொள்ளக் கூடாதா?" என்று குரு கேட்டார்.

காலையில் தான் கேட்ட கேள்விக்கு சரியான விடை கிடைத்ததை அறிந்த சீடன் குருவுக்கு நன்றி செலுத்தினான்.

# அன்பு

நீ மனிதர்களில் யாரிடமாவது அன்பு செலுத்துவாயானால் அதற்காக நீ துன்பப்பட்டே ஆக வேண்டும். எவன் ஒருவன் கடவுளை மட்டும் நேசிக்கிறானோ அவனே பாக்கியவான். இறைவனிடத்தில் அன்பு செலுத்துவதால் துன்பமே இல்லை.

# மனம்

மனமே அனைத்திற்கும் மூலகாரணம்-தூய்மை, தூய்மை இன்மை இவற்றை உணரச் செய்வது மனமே.

தூய்மையான மனம் உடையவர்கள் அனைத்தையும் தூய்மையாகவே காண்கிறார்கள்.

உன் மனத்தில் தீங்கு உள்ளது. அதனால்தான் உன்னால் அமைதியைப் பெற முடியவில்லை.

கடவுளுக்கு அர்ப்பணம் செய்யாத எதையும் உண்ணக்கூடாது. நீ உண்ணும் உணவின் இயல்பைப் பொறுத்தே உன் இயல்பு அமைகிறது. இறைவனுக்குப் படைத்த உணவு உடலையும உள்ளத்தையும் தூய்மைப் படுத்துகிறது. அதனால் நீ பலம் வாய்ந்தவனாவாய். மனம் தூய்மையானால் உனது அன்பும் நம்பிக்கையும் நிர்மலமாகும்.

—சுவாமி சிவானந்தா.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன்-கோவை.

ஸவம் செய்வார்கள். இதை இராப் பத்து, பகல் பத்து என்றும் அழைப் பர்.

मार्गशीर्षस्य शुक्लस्य प्रथमायामुपक्रमेत् ।
दशम्यन्तं ततो भूयः एकादश्यां तथारभेत् ॥
पञ्चमी कृष्णपक्षस्य तावत् दशदिनं भवेत् ।
तद्विधानं तु कमले भक्तमोक्षदमुत्सवम् ॥

மார்கழி அமாவாசை மறுநாளான பிரதமை திதியிலிருந்து தசமி திதி வரையில் பகல் பத்து என்ற உத்ஸவ மும் ஏகாதசியிலிருந்து கிருஷ்ண பஞ்சமி வரையில் பத்து நாட்கள் இராப்பத்து என்ற உத்ஸவமும் நடை பெறுகிறது.

இந்த மார்கழி மாதம் சுக்லபக்ஷ ஏகாதசியை வைகுண்ட ஏகாதசி என்று கூறுகிறார்கள். இதற்குக் காரணமென்ன? என்று லக்ஷ்மி, நாரா யணனைப் பார்த்துக் கேட்கிறாள்.

विस्मृतासि पुरा वृत्तं स्मारयामि तव प्रिये ।
प्रलयोदे ह्यहं सुप्तो वटपत्रे पुरा रमे ॥
बालरूपधरो देवि तदा त्वं वक्षसि स्थिता ॥

ஸ்ரீப்ரச்ன ஸம்ஹிதையில் அதற்குப் பரமன் விடை கீழ்வருமாறு பகர் கின்றார்: "தேவி! நீ மறந்துவிட்டாய் போலும். மறுபடியும் ஞாபகப்படுத்து கிறேன். நான் பிரளய காலத்தில் தண்ணீரில் ஆலிலைமேல் சிறுகுழந்தை உருவெடுத்துப் படுத்திருந்தேன். அப்பொழுது நீ என் மார்பில் இருந் தாய்.

मन्नाभिकमलाद् ब्रह्मा मत्संकल्पादजायत ॥
आननैश्चतुरो वेदानुच्चरन् शास्त्रसम्मितान् ।
सर्वज्ञस्य जगत्स्रष्टुः स्मयोऽभूत् मां च नास्मरत् ॥

அப்பொழுது என்னுடைய ஸங் கல்பத்தால் என்னுடைய தொப்பூழி லிருந்து நான்கு முகங்களைக் கொண்ட நான்முகன் உண்டானார். அவர்தன் நான்கு முகங்களிலிருந்து நான்கு வேதங்கள் வந்து கொண் டிருந்தன.

मम कर्णात्समुद्भूतौ असुरौ लोककण्टकौ ।
ब्रह्माणं हन्तुमारब्धौ सोऽरोदीत् प्राकृतो यथा ॥
जलेशयं च मां दृष्ट्वा ह्यस्तौषीच्चतुराननः ॥

அந்த சமயம் என்னுடைய காது களிலிருந்து இரண்டு அஸுரர்கள் உண்டானார்கள். அவர்கள் நான் முகனைக் கொல்ல முயற்சித்தார்கள். நான்முகன் சாதாரண மனிதரைப் போல் அழ ஆரம்பித்துவிட்டார். தண்ணீரில் என்னைப் பார்த்து தோத் திரம் செய்தார்.

ततोऽवबुध्य तौ दृष्ट्वा प्रोवाचं दानवोत्तमौ ।
वरं वृणीतं मत्तो वां तावब्रूतामनन्तरम् ॥
वृणीष्व मत्तो देवेश वरं दास्याव दुर्लभम् ।

நான் விழித்துக் கொண்டு அவர் களிடம் "நீங்கள் இருவரும் வேண் டிய வரங்களைக் கேளுங்கள் தரு கிறேன்" என்றேன். அவர்கள் திருப்பி "நாங்கள் உங்களுக்குத் தரு கிறோம் வரங்கள்" என்றார்கள்.

तयोरित्थं वचः श्रुत्वा प्रहस्याहमथाब्रुवम् ।
मया हतौ युवां दैत्यौ पुनः प्रकृतिमेष्यतः ॥
इत्युक्तावसुरौ मां तु मासमावां त्वया सह ।
युध्वा त्वतो वधं प्राप्य सिद्धिनिष्ठामवाप्नुतः ॥
एवं निश्चित्य तदनु युद्धसंरम्भिणौ मया ॥

அவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டு சிரித்துக் கொண்டே 'நீங்கள் இருவரும் என்னால் கொல்லப்பட்டு மறுபடியும் பிழைத்துவிட்டீர்கள்' என்று சொன்னேன். அவர்கள் "உங்க ளோடு ஒரு மாதம் யுத்தம் செய்து மரண மடைந்து மோக்ஷத்தை விரும்புகிறோம்' என்று கூறி யுத் தத்தை ஆரம்பித்தார்கள்.

नियुद्धं मासमेकं तु कृत्वा सार्धं सुमध्यमे ।
मया हतौ तौ देवत्वं प्राप्तौ चक्राब्जधारिणौ ॥
किं च त्वल्लोकवासं च नित्यं स्यात्कमलेक्षण ।
इति सम्प्रार्थितोऽहं हि दैत्यौ मत्स्वरूपिणौ ॥

ஒரு மாதம் வரையில் யுத்தம் நடந்து, அவ்விருவர்களும் என்னால் இறுதியில் கொல்லப்பட்டார்கள்.

அவர்கள் இருவர்களும் சக்கரம் தாமரை மலர் இவைகளைத் தரித் தவர்களாக உன்னுடைய லோகத்தை யடைய வேண்டுமென்றும் என்னோடு ஐக்யமாகிவிட வேண்டுமென்றும் பிரார்த்தித்தார்கள். மேலும்

चापमासे शुक्लपक्षस्यैकादश्यामिनोदये ।
द्वारमुत्तरमुद्घाट्य तन्मार्गात् प्रापयं च तौ ॥

அவர்களை தனுர் மாஸத்தில் சுக்ல பக்ஷ ஏகாதசியில் சூர்யோதயத்தில் வைகுண்டத்தின் வடக்கு வாயில் வழி யாக அனுப்பி வைக்கப்பட்டார்கள். அவர்கள்,

प्रार्थयाव विशालाक्ष प्रार्थनां सफलां कुरु ।
उत्तरमार्गेण प्रविशन्ति च ये हरे ॥
ते वैकुण्ठमिमं प्राप्य मोदन्तां नित्यसूरिवत् ।
तयोस्तद्वचनं श्रुत्वा भक्तवश्यस्तथाब्रुवम् ॥

"தேவ! எவனொருவன் இந்ததனுர் மாஸத்தில் வைகுண்டத்தின் வடக்கு வாசல் வழியாக வைகுண்டத்தை அடைந்து தங்களை ஸேவிக்கிறானோ, அவனுக்கு எப்பொழுதும் தங்களின் அருகாமையிலேயே நித்ய ஸூரிகளாக சந்தோஷப்பட்டு வாழ வேண்டு மென்று அனுக்ரஹிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

'அப்படியே ஆகட்டும்' என வர மளித்தேன்."

ஆகையால் இந்த தனுர் மாத சுக்ல பக்ஷ ஏகாதசியன்று வைணவக் கோயிலில் வைகுண்ட வாயில் என்று வடக்கு வாசலின் வழியாக பெரு மாள் எழுந்தருளி பக்தர்களுக்குக் காக்ஷியளிக்கும் உத்ஸவம் இன்றும் நடைபெற்று வருகிறது. அன்று பெருமாளை வடக்கு வாசலில் தெரி சத்தால் வைகுண்டம் கிடைக்கும் என்பது நம்பிக்கையாகும்.



ஓம நமசிவாய ...... ஓம நமசிவாய" என்று ஜபித்தபடி வாலி வானில் பறந்து சென்று கொண்டிருந்தான். அப்போது, "ஐயா! தர்ம தேவரே! என் குரு வயோதிகத்தை அடைந்தவர். எனது காணிக்கைக்காக அவர் ஆவலோடு காத்திருப்பார். நானோ ஏழை, அதிலும் சிறுவன். இந்த வைகறை வேளையில் என் உயிரைப் பிடிக்க வந்திருக்கிறீர்களே? இது நியாயமா? என்னை விட்டுவிடுங்கள்" என ஆசார நியமங்களுடன் ஒரு காணிக்கையோடு எம தர்மனைப் பணிந்து நின்றான் சிறுவன் ஒருவன்.

சிறுவனின் கெஞ்சல் வாலியின் செவிகளில் விழ, 'என்ன இது? இருள் விலகாத இந்த வைகறை வேளையில் இப்படி ஒரு போராட்டமா? என்னவென்றுதான் பார்ப்போமே' என எண்ணியவனாய் பூமிக்கு வந்தான்.

"சிறுவனே உன் விதி முடிந்துவிட்டது. என் கடமையை நான் செய்துதானே ஆக வேண்டும்?" என்று கூறிக்கொண்டே சிறுவனை நெருங்கினான் எமன்.

"தர்மராஜனே! நான் வளர வேண்டியவன். அதே போல் வாழவும் வேண்டியவனல்லவா? கர்ம பலன்களை அனுபவித்தால்தானே என் பிறவியின் மேன்மையை நான் உயர்த்திக் கொள்ள முடியும். என் மீது இரக்கம் கொண்டு என்னை விட்டு விடுங்கள்" என்று மன்றாடினான் சிறுவன்.

"கால மாற்றங்களையும் பருவநிலைகளையும் கடந்து நிற்பதுதான் எனது கடமை என்பதை அறிந்துகொள். சிறுவனே! என் கடமையிலிருந்து நான் தவறவும் மாட்டேன். நீ சிறுவன என்பதற்காக உன்னை விட்டு விடவும் மாட்டேன். பூவும் பிஞ்சும் உதிர்கிறதே என்று நான் கவலைப்படலாமா? அப்புறம் என் கடமை என்னாவது?" என்று கூறி சிறுவனின் மீது பாசத்தை வீசுகிறான் எமன்.

"காலதேவா! நில்" என்ற அதிகார அதட்டலுடன் பாசக்கயிறு சிறுவன் மீது விழாமல் தன் கதையால் தடுத்து நின்றான் வாலி.

"நீ யாராயிருந்தாலும் என் கடமையைத் தடுப்பது நியாயமற்றது. சிறுவனை விட்டு நகர்ந்து நில் வீரனே!" என்று எமனும் அதிகாரமாகவே அதட்டினான்.

"மன்னிக்க வேண்டும் காலா! உன் கடமையைத் தடுக்க நான் வரவில்லை. இத்தனை நேரமும் உங்கள் வாதங்களைக் கேட்டுக்கொண்டுதானிருந்தேன். அதனால் இச்சிறுவனுக்கு உயிர்ப்பிச்சை அளிக்கும்படி உன்னை யாசிக்கவே இங்கு வந்தேன்" என்று எமனை வணங்கி நின்றான் வாலி.

"வீரனே! தர்மத்திலிருந்து தவறினால் பழி என்னைச் சூழுமே!"

"அதை நீ ஏற்பதிலும் தவறில்லை காலதேவா! உலகில் போற்றத் தகுந்தது குருபக்தி. ஆர்வத்தோடு பெரும் சிரமப்பட்டு பொருள் தேடி அதை குருவுக்கு காணிக்கையாக்கச் செல்லும்போது நீ அவன் உயிரைக் கவர்வது மட்டும் எவ்வகையில் தர்மமாகும்?"

"இப்போது இச்சிறுவனின் உயிரைக் காக்கப்போவது தர்ம நியாயங்களோ, இவனின் குருபக்தியோ அல்ல. இவன் ஜாதகப்படி இப்போது ஆபத்துகள் நிறைந்த காலம். பரிகாரங்களின்மூலம் அதைத் தவிர்த்திருக்கலாம். ஆனால் அவனது அன்னை தந்தை ஆசான் அனைவருமே அலட்சியமாய் இருந்து விட்டார்கள்" என்று சொல்லிச் சிறுவனை நெருங்கினான் காலன்.

வாலி காலனின் எதிரே நின்று, "இப்போது இவனைக் காக்க வேறு வழியே இல்லையா?" என்று வருத்தத்துடன் கேட்டான்.

"ஏன் இல்லை? சகல சாஸ்திரங்களையும் கற்ற விற்பன்னன் ஒருவன் மனம் உவந்து தான் செய்த சிவ பூஜையின் பலனைத் தாரைவார்த்துக் கொடுத்தால் நான் இவனை விட்டு விடுகிறேன்" என்றான் எமன்.

"அவ்வளவுதானே? இதோ...இச்சிறுவனுக்காக என் சிவபூஜையின் பலனை எல்லாம் நான் தாரைவார்த்துக்கொடுக்கிறேன்" என வாலி கூறவும், எமன் ஏளனமாய்ச் சிரிக்கிறான்.

"ஏனய்யா சிரிக்கிறீர்கள்? கார்த்தவீரியனும், ராவணனும் அசுரர்கள்தான். அவர்கள் சிவபூஜை செய்யவில்லையா? அதைச் சிவன்தான் ஏற்கவில்லையா? உருவத்தைக் கண்டு இகழாதே! தர்மதேவனே! என் சக்தி நீ அறியாதது. இத்தனை காலமும் நானகு கடற்கரைகளும் சென்று அர்க்கியம் கொடுத்துச் சிவபூஜை செய்து வருகிறேன், அந்தப் பலனை எல்லாம் இப்போது இச்சிறுவனுக்காக தாரை வார்த்துக் கொடுக்கிறேன்" என்று கூறி அருகிலிருந்த குளத்தில் இறங்கினான் வாலி.

நீரைக் கைகளில் ஏந்தி வந்த வாலி திகைத்து நிற்க, தேவேந்திரன் தன் மகனை ஆசீர்வதிக்கிறான்.

# வாழ்த்தும் வரங்கள்

திருமதி. டி. ஆர். மேகலை
செங்கல்பட்டு.

"என் தந்தை தேவேந்திரனு அந்தணச் சிறுவனுய் வந்து என்னை சோதித்தது?"

"ஆம் வாலி! உன் அறிவையும் கருணையையும் சோதிக்கவே நான் காலதேவனுேடு வந்தேன். உன்னைக் பெற்ற போது நான் அடைந்த இன்பத்தைவிட இன்று பெருமகிழ்ச்சி கொள்கிறேன். உத்தமனுகவும் உயர்ந்தவனுகவும் உன்னைக் காணும்போது என் மகிழ்ச்சி எல்லை கடந்து போகிறதடா மகனே? மற்றவர்களைக் காக்க உன் உயிரையும் விடச் சித்தமாயிருக்கும் உனக்கு எத்தனையோ ஆபத்துக்கள் வர இருக்கின்றன. அப்போது எல்லாம் உன்னைக் காக்கும் கவசமாய் இந்த மாலை இருக்கும்'' என்று கூறி ஒரு தங்க மாலையை வாலியின் கழுத்தில் அணிவிக்கிறுன் தேவேந்திரன்.

''வாலி! இந்த மாலை உன் கழுத்திலிருக்கும் வரை எவரும் உன்னைக் கொல்ல முடியாது. என் பாசமே கூட உன்னை நெருங்காது'' என்று எமனும் வாலியை வாழ்த்துகிறுன.

'காலையில் செய்த பூஜைக்குக் கை மேல் பலன்' என நினைத்தபடி வாலி தன் வழியே போகும் போது, ''பகவானே! இப்படிப் பாறையின் இடுக்கில் சிக்கிவிட்டேனே. இக்கானகத்தில் யார் வந்து என்னைக்காப்பாற்றப் போகிறுர்கள்?'' என்ற ஒரு அவலக்குரல் வாலியின் காதுகளில் விழுகிறது.

"யாரோ சந்நியாசியின் குரல் போலல்லவா கேட்கிறது. நாம் விரைந்து சென்று அவருக்கு உதவுவோம்'' என நினைத்தபடி வந்த வாலி பாறையின் இடுக்கில் சிக்கிய துறவியைக் கண்டு திகைத்தான்.

"ஐயா! உம்மைப் பார்த்தால் பெருந்தவசி போல் தெரிகிறது. இந்தப் பாறைக்குள் நீர் எப்படிச் சிக்கினீர்?'' எனறுன் வாலி.

"என் மகனைக் காண நான் இந்த வனத்துக்கு வந்தேன். வழியில் சிங்கம் துரத்தியது. அதனிடமிருந்து தப்ப இந்த இடுக்கில் பதுங்கினேன். இப்போது வெளியில் வர முடியவில்லை. உன்னைப் பார்த்தால் பெருவீரனைப் போல் தெரிகிறது. என்னைக் காப்பாற்றேன்'' என்று வாலியிடம் கேட்டார் துறவி.

"இதோ!" என்ற வாலி, "பாசம் என்பதும் இந்த இடுக்கைப் போன்றது தான். அதிலிருந்து அத்தனை சுலபத்தில் வெளியேற முடியாது. சற்று அமைதியாய் இருங்கள்''என்று கூறிவிட்டு பலம் கொண்ட மட்டும் முயன்று பாறையை நகர்த்துகிறுன். பாறை உருண்டு செல்ல வெளியில் வந்த துறவி வாலியைப் பாராட்டினுர்.

"ஐயா! ஆபத்தில் சிக்கியவர்களைக் காப்பது என் கடமை. நான் வீரன் தான், பாசமுமஇரக்கமும் தான் என் நெஞ்சில் எப்போதும் நிறைந்திருக்கும். துறவியானுலும் வயோதிகத்தைப் பாராது பிள்ளைப் பாசத்தால் இத்தனைத் துன்பங்களுக்கு ஆளாகிவிட்டீர்களே. ஐயா! உமது மகன் இந்தக் காட்டில் எங்கே என்ன செய்து கொண்டிருக்கிறுன்!'' என்றுன் வாலி.

நீண்டதொரு பெருமூச்சுடன், "கிஷ்கிந்தையின் மன்னன் வாலிக்கு பயந்து என மகன் காட்டில் எங்கோ ஒளிந்து கொண்டிருக்கிறுன்'' என்றுர் துறவி.

"உமது மகன் என்ன குற்றம் புரிந்தவன்? இல்லை வாலிதான் அவன் எதிரியா? எதற்காக அவன் வாலிக்குப் பயப்பட வேண்டும்?"

"வீரனே! நீ சொல்வது போலெல்லாம் எது மில்லை. வாலி பெருவீரனும், முரடனும். அவன் பிடியில் சிக்கினுல், அவன் தன்னைக் கொன்று விடுவான் என்ற அச்சத்தில் என் மகன் மறைந்து வாழ்கிறுன்''.

துறவி சொன்னதைக கேட்டு விண்ணதிரச் சிரிககும் வாலி, ''நல்ல வேடிக்கை இது'' என்று சொல்லிவிட்டு, "ஐயா துறவியாரே கிஷ்கிந்தையின மன்னன வாலியால் உமது மகனின் உயிருக்கு ஒரு போதும் ஆபதது நேராது. உமது மகனைப் பார்த்தால் அவனை தைரியமாய் இருக்கச் சொல்லுஙகள்'' என்றுன்.

"அதை ஏப்படி அத்தனை உறுதியாய் நீங்கள் சொல்கிறீர்கள்?'' எனறு துறவி தன் சநதேகத்தைக் கிளப்ப "அந்த வாலியே நான தான் ஐயா, உமது மகனை வாழவைக்க நான என் உயிரையும் தருவேன்'' என்று வாலி சொன்னதும், "இந்த வாக்கை எப்போதும், எந்த சந்தர்ப்பத்திலும் நினைவில் வைத்து காப்பாற்றுவாயா கிஷ்கிந்தையின் வேந்தனே!" என்று துறவி வாலியிடம் உறுதி கேட்டார்.

''சத்தியமாய்க் காப்பேன் துறவியாரே'' என்று துறவியின் கைகளைப் பற்றிய வாலி சட்டெனக் கைகளை இழுத்துக் கொண்டு, ''துறவியாரே! உமது கைகள் ஏன் நெருப்பாய்ச் சுடுகிறது?'' என்று வினவினுன்.

''நானே தணல் வடிவானவன் தானே வாலி? என்னை நன்றுகப் பார்!'' என்றுகூறி துறவி சிரிக்க, அவரது சந்நியாசக் கோலம் மறைந்து அங்குச் சூரிய பகவான நிற்கிறுர்.

வாலி திகைத்து, ''இதென்ன இன்று சோதனைக்கு மேல் சோதனை. உலகைக் காக்கும் சூரியக் கடவுளா இப்படி புத்திரப் பாசத்தால் என்னிடம் வந்து வரம் கேட்பது? என்னுல் நம்ப முடியவில்லையே'' என்றுன்.

''இனி எதிர்காலத்தில் நடப்பதை எல்லாம் உன்னுல் நம்பத்தான் முடியாது வாலி'' என்ற சூரிய பகவான் "வாலி என் மகன் சுகரீவன் உனக்கு நிகரான வீரன் தான். எதிர் காலத்தில் உங்களுக்குள் மோதல்கள் நேரலாம். அப்போது உனக்கு என் மகனின் உயிருக்கு எவ்விதமான தீங்கும் நேராது என்று நீ எனக்கு வாக்குறுதி தரவேண்டும்'' என்று மீண்டும் வாக்குறுதி கேட்கிறுன் சூரியன்.

"அப்படியே", என்ற வாலி சூரியனைப் பணிந்து நின்றுன்.

''வாலி! உனது கருணையும் தியாகமும் என்னை நெகிழ வைக்கிறது. கொடுத்த வாக்கை நீ காப்பாய் எனும் நமபிக்கை என்னுள் நிலைத்து விட்டது. நீ செய்யும் தியாகங்களும் தர்மங்களும என்றும் உன்னைக் காப்பதோடு இந்திரனின் வாழ்த்தும தர்ம தேவனின் ஆசியும் அழியாத் தன்மை பெற்ற சிரஞ்சீவியாய் உன்னை வாழ்த்தும் வரங்களாகும. நான் வருகிறேன் வாலி'' என்று சூரியன் வாலியை வாழத்தி ஆசீர்வதித்துச் செல்ல, வாலி சூரியன சென்ற திக்கை நோக்கிப் பணிந்து நிற்கிறுன்.

# பஞ்சவரதர் திருத்தலம்



சென்னையினின்றும் 80 கிலோ மீட்டர் தொலைவிலும், காஞ்சிபுரத்தினின்றும் 25 கிலோமீட்டர் தொலைவிலும் உத்திரமேரூர் என்ற தலம் உள்ளது. காஞ்சிபுரம், கும்பகோணம் போன்று கோயில்களின் நகரம் என்று சொல்லும்படி பல கோயில்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. வரலாற்றுப் புகழ்பெற்ற குடவோலை கல்வெட்டினை உடைய வைகுந்தப் பெருமாள் கோயில், அருணகிரிநாதரால் பாடப் பெற்று முருகப்பெருமானது அரிய திருவுருவினை மூலவராகக் கொண்ட சுப்ரமணியசுவாமி கோயில் ஆகியவையன்றி சிறப்பு மிக்க சுந்தரவரதப் பெருமாள் கோயிலும் இங்கு உள்ளது.

ஒன்றின் மேல் ஒன்றாக மூன்று தளங்களைக் கொண்ட அமைப்பினை உடையது இந்தக் கோயில். கீழ்த் தளத்தில் கிழக்கு நோக்கி மலர்மகள் மண்மகளுடன் சுந்தரவரதப் பெருமாள் நின்ற திருக்கோலத்தில் உள்ளான். இவனது 4 கைகளில் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் இரு கைகள் அபயமற்றும் ஊரு முத்திரைகளில் காணப்படுகின்றன. இவன் பஞ்சபாண்டவரில் பீமனால் வணங்கப்பட்டவனாகக் கருதப்படுகிறான். முகமண்டபத்தில் காளிங்க நடனக் கண்ணன், ஆஞ்சநேயர், லட்சுமணன், சீதையுடன் இராமன், சக்கரத்தாழ்வார், தேவியுடன் கூடிய புருஷா மிருகம் ஆகியவற்றின் உறசவர் வடிவங்கள் உள்ளன. தெற்கு நோக்கி அர்ச்சுனனால் தொழப்பட்ட அச்சுதவரதன் தன் இரு துணைவியருடன நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிறான். இவனுடன் கஜலட்சுமி உள்ளாள். மேற்கு நோக்கி நகுலனால் பூசிக்கப்பட்ட அனுருத்திரவரதன் நின்ற திருக்கோலத்தில் தன் இரு துணைவியருடன் உள்ளான். அவனுடன் இரதியும் மன்மதனும் காணப்படுகின்றனர். வடக்கு நோக்கி சகாதேவனால் வணங்கப்பட்ட கல்யாண வரதன் தன் இரு துணைவியருடன் வீற்றிருநத திருககோலத்தில் உள்ளான். இவனுடன் பிருகு முனியும் காணப்படுகிறார். உத்குடி இருக்கையில் உட்கார்ந்துள்ள கல்யாண வரதனது முன் வலக்கை பின்னால் ஊன்றிய நிலையிலும், முன் இடக்கை முழங்கால் மேல் நீட்டிய நிலையிலும் உள்ளன.

கீழ்த்தளத்தில் தென் கோடியில் திரௌபதியால் தொழப் பெற்ற ஆனந்தவல்லித்தாயாரும், வடகோடியில் சூடிக்கொடுத்த நாச்சியாரும் காணப்படுகின்றனர். தாயாரின் வடிவங்கள் மட்டும் சிலாவடிவங்கள். எனவே இவற்றிற்கு மட்டும் அபிஷேகம் செய்யப்படுகிறது. வரதர்களின் வடிவங்கள் மரத்தால் செய்யப்பெற்றன. எனவே அவற்றிற்கு அபிஷேகம் கிடையாது. இங்கு விசுவக்சேனர், நம்மாழ்வார், பெரியாழ்வார், மங்கைமன்னன், உடையவர், வேதாந்த தேசிகர் ஆகியோரின் மூலவர் மற்றும் உற்சவர் வடிவங்கள் உள்ளன.

இரண்டாவது தளத்தில் கிழக்கு நோக்கி தர்மராஜரால் வணங்கப் பெற்ற வைகுண்டவரதன், மண் மடந்தை மலர்மடந்தை இருபாலும் சூழ வீற்றிருந்த திருக்கோலத்தில் காணப்படுகிறான். சுகாசனத்தின் அமர்நதுள்ள முன் இடக்கை 'முழங்கால் மீது நீட்டிய நிலையில் உள்ளது. தெற்கு நோக்கி உள்ள கருவறையில் கைகள் அபயமற்றும் வரதமுத்திரைகளில் உள்ள கண்ணனும், அவனுக்கு எதிரில் கூப்பிய கைகளைக் கொண்ட அர்ச்சுனனும் காணப்படுகின்றனர். மேற்கு நோக்கி யோகநரசிம்மர் இரு கால்களும் குத்திட்ட நிலையில் உட்கார்ந்துள்ளான். இவனது பின்இருக் கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் இரு கைகள் முழங்கால்கள் மீது நீட்டியபடி உள்ளன. வடக்கு நோக்கி சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள பூவராகர் காணப்படுகிறான். இவனது மடியில் மண்மகள் அமைக்

---

திரு. தி. இராசமாணிக்கம்,
பொள்ளாச்சி.

---

கப்பட்டுள்ளாள். இவளது பின் இரு கைகளிலே சங்கும் சக்கரமும் இருக்க, முன் வலக்கையை அன்னை யின் கால்களைப் பிடித்தபிடியும், முன் இடக்கை அவளை அணைத்தபடி யும் உள்ளன. இரு கைகளையும் கூப் பியபடி உள்ள மண்மடந்தை தன் கால்களை நீட்டியபடி காணப்படு கிறாள்.

மேல்தளத்தில் சயனத்திருக் கோலத்தில் அரங்கநாதன் உள்ளான். இவனது வலக்கை மார்க்கண்டேய னுக்கு முக்தி அளிக்கும் நிலையிலும் இடக்கை நீட்டியபடியும் அமைக்கப் பட்டுள்ளன. இவனது நாபிக் கமலத் தில் பிரமாவும், காலடியில் தாமரைப் பூவும், மதுகைடபரும் காணப்படு கின்றனர். வடக்கு நோக்கி 4 முகங் களுடன் பிரமா தனியாகவும், மார்க் கண்டேயருக்கு எதிரில் மண்மடந்தை யும் உள்ளனர்.

அதிட்டானம் கருங்கற்களாலும் அதற்கு மேல் செங்கற்களாலும் கட் டப்பெற்று சுண்ணும் பூசப்பட்டுள்ள தால் இந்தக் கோயில் கலப்புக் கோயில்' (மிஸ்ர கோயில்) என்ற வகையைச் சார்ந்தது. இது துலா பாரத்தளி என்றும் முற்காலத்தில் அழைக்கப்பெற்றது. இதினின்றும் இங்குள்ள இறைவனுக்கு துலாபாரக் காணிக்கை அளிப்பது சிறப்பாகக் கருதப்பட்டு, அது பெரும் அளவில் நடைபெற்றுஇருக்கவேண்டும்என்பது தெளிவாகிறது. கேரள மாநிலத் தைச் சார்ந்த குருவாயூர் கிருஷ்ணன் கோயிலில் இந்நாட்களில் துலாபாரக் காணிக்கை சிறப்பாக நடைபெற்று வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இக்கல்வெட்டுகளில் இந்தக் கோயி லின் பெயர் 'ஸ்ரீ வெளி விஷ்ணு கிருகம்' என்னும் இறைவனதுபெயர் 'ஸ்ரீ கோயில் வெண்ணைமூர்த்தி பெரு மாள் அடிகள்' என்றும் குறிப்பிடப் பட்டுள்ளன. கி.பி. 786 முதல் 836 வரை ஆட்சி புரிந்த பல்லவ மன் னனை நந்திவர்வனின் 10ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு இங்குக்காணப்படு கிறது. எனவே இது அவன் காலத தில் கட்டப்பெற்றதாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. முதல் பராந்தகச் சோழனின் கல்வெட்டில் இந்தக் கோயிலின் பெயர் 'துலாபார ஸ்ரீ கோயில்' என்று உள்ளது. மூன் றும் குலோத்துங்க சோழனின் 38வது ஆட்சி ஆண்டு கல்வெட்டினின்றும் கோயில் தேவரடியாள் ஆயிரத்தி இரு நூற்றுவ மாணிக்கம் என்பவன் வெளி மதிள், அபிஷேக மண்டபம் ஆகியவற் றைக் கட்டியதாகத் தெரிகிறது. அதே கல்வெட்டில் இந்தக் கோயி லின் பெயர் "இராஜேந்திர சோழ விண்ணகரம்" என்று குறிக்கப்பட் பட்டுள்ளது. 18 நாட்டின் வைண வர்களை வைணவக்கோயில்களுக்குக் காப்பாளர்களாக நியமித்ததை மற் றொரு கல்வெட்டு கூறுகிறது. இறை யன்பர்களிடமிருந்து நிபந்தங்களைப் பெறவும், அவற்றை நிர்வகிப்பது பற்றியும் இந்தக் குழுவின் அனுமதி பெற வேண்டும்.

நின்றத் திருக்கோலம், வீற்றிருந்த திருக்கோலம் மற்றும் சயனத்திருக் கோலம் என்ற திருமாலின் மூன்று திருக்கோலங்களையும் உடைய மூன்று தளங்களுடன் கட்டப் பெற்ற ஒருசில வைணவக கோயில்களில் இது ஒன்று. 1000 ஆண்டுகளுக்கு மேலாகியும் சிதில மாகாதுஉள்ள இரண்டு வைண வக் கோயில்களில் இது ஒன்று. காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயில் மற்றொன்று. சிறப்பு மிக்க அஷ்டாங்க விமானத்தை உடைய மூன்று வைணவக் கோயில்களில் இது ஒன்று; ஏனையவை திருக்கோட்டியூர் சௌமிய நாராயணன் கோயில், மதுரை கூடல் அழகர் கோயிலாம். பஞ்ச பாண்டவர்களால் பூசிக்கப் பெற்றதாகப் போற்றப்படும் சுந்தர வரதர், அச்சுத வரதர், அனுருத்திர வரதர், கல்யாண வரதர் மற்றும் வைகுண்ட வரதர் ஆகிய ஐந்து வர தர்களை மூலவர்களாக உடைமையால் இது பஞ்சவரதத்தலம் எனப் புகழப் பெறுகிறது. பஞ்சவரதாசரேயன்றி கண்ணன், யோகநரசிம்மர், பூவராகர் அரங்கநாதன் என மேலும் நால்வர் மூலவர்களாக இங்கு உள்ளனர். மூன்று தளங்களைக் கொண்ட காஞ்சி புரம் வைகுந்தப்பெருமாள் கோயில் திருக்கோட்டியூர் சௌமிய நாராய ணன் கோயில், மன்னூர் கோயில், வேதநாராயணன் கோயில் போலன்றி இங்கு திருமாலின் 9 மூலவர் வடிவங் கள் உள்ளது. இதன் தனிச் சிறப் பாகும். எனவே இது நவபெருமாள் கோயில் எனவும் போற்றி வணங்கப் படுகிறது.

பல்லவர் காலத்தில் கட்டப் பெற்ற இந்தக் கோயிலின் அமைப்பு வேறு எங்கும் காண இயலாத அரிய ஒன்றாகும். இதை முன்னோடியாகக் கொண்டு சமீப காலத்தில் சென்னை யில் அஷ்டலட்சுமி கோயில் கட்டப் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.





# சாளக்கிராமம் அடை நெஞ்சே!

ஸ்ரீமன் நாராயணன் உலகைப் படைத்து, காத்து, அழித்தும் முத்தொழிலேயும் செய்யும் தெய்வமாகிருன். அவனே முதல்வனும், பூர்ணனும். தனக்கு நிகரோ அல்லது மேலானவனே இல்லாதவனுகவும் இருக்கிருன். இவன் எடுத்த அவதாரங்களோ (பிறப்போ) கணக்கில் அடங்கா. ஆனுல் நாம் பிறப்பதற்கும் அவன் பிறப்பதற்கும் அதிக வித்தியாசம் உண்டு. நாம் பிறப்பது கர்மத்தின் பலனுல். (பாப புண்ணியத்தினுல்) ஆனுல் அவன் பிறப்போவெனில் கருணையினுல். தர்மம் அழியும் போதெல்லாம் (தர்மரக்ஷகனுக) அதைக்காக்க(தர்மத்தைநிலைநிறுத்த) அவன் பிறப்பதாக தானே சொல்லியும் இருக்கிருன். (கீதாசார்யனுக—அர்ஜுனனுக்கு).

இப்படி அவன் இருப்பு. மேலும் அவன் பர, வ்யூக, விபவ, அர்ச்சை, அந்தர்யாமி என ஐந்து நிலேகளில் நிரந்தர வாசம் செய்கிருன். இக்கலியில் அவனேசுலபமாகக்காண்பது அர்ச்சையில் என்பர் பெரியோர். இதை ஆழ்வார்கள் "பின்னுனர் வணங்கும் ஜோதி" என்று சொன்னுர்கள். இதில் நாம் ஈடுபடுவது அர்ச்சையில்தான். ஆழ்வார்களும் ஆச்சாரியார்களும் அதிகமாக அர்ச்சையில் ஈடுபட்டிருக்கிருர்கள். பன்னிரு ஆழ்வார்களுள் பலர் பலவிதத்தில் ஈடுபட்டிருக்கிருர்கள். அர்ச்சையில் அதிகமாக ஈடுபட்டவர் "திருமங்கை ஆழ்வார்" ஆவார். இவர் ஒவ்வொரு திவ்ய தேசம் தோறும் நேரில் சென்று எம்பெருமான்களே மங்களாஸாஸனம் செய்திருப்பது மிக அற்புதம். தெய்வமல்லால் செல்லவொண்ணுத இடங்களுக்கும் சென்று (காடுகள், மலேகள் முதலிய இடங்களுக்கு) எம்பெருமானே வழிபட்டிருக்கிருர். முதலில் இவர் பாடிய ஸ்தலம் (திவ்ய தேசம்) திருப்பிரிதி ஆகும். அடுத்து இவர் சென்றது வதரி நாராயணன். அடுத்து சாளக் கிராமம் வருகிருர். இவருடைய பாசுரங்களில் இயற்கை அழகையும், கோயிலின் தோற்றம், உள்ளே இருக்கும எம்பெருமான் அழகு இவைகளே வெகு கம்பீரமாகப் பாடி இருக்கும் நடை ரசிகர்களுக்கு மிகவும் பெருவிருந்தாகும். இனி ஆழ்வார் சென்றடைந்த சாளக் கிராமம் நாமும் சென்றடைவோம்.

இத்தலம் வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரெண்டில ஒன்ருகும். இது நேபாள தேசத்தில் உள்ளது. தன் நெஞ்சைப் பார்த்து சாளக் கிராமம் அடை நெஞ்சே என்று பத்துப்பாக்களிலும் சொல்லியிருப்பது காணலாம். மனிதனின் ஐந்து இந்திரியங்களே (பஞ்சேந்திரியம்) அடக்கி ஆளச் செய்வது மனமே ஆகும். இந்த மனமானது நமக்கு உறுதுணையாக இருக்குமாயின் நாம் நினைத்த காரியங்களே சுலபமாக முடிக்கலாம். இதை ஆழ்வார்கள் சொல்லும்போது, 'நீயும் நானும் இந்நேர் நிற்கில் மேல் மற்ருேர் நோயும் சார்கொடான் நெஞ்சமே சொன்னேன்' என்று நம்மாழ்வாரும் மற்றும் பலரும் நெஞ்சையே (நெஞ்சு, மனம், வாக்கு, நாக்கு இவைகள் ஒன்றுதான்) ப்ரதானமாக பிரார்த்தனே செய்து வழிபட்டிருக்கிருர்கள். அதுபோல் இக்கலியனும் தம்நெஞ்சையே துணையாகக் கொண்டு சாளக் கிராமம் செல்கிருர்.

பெரிய திருமொழி 1-5ம் தசகம் :

முதல் பாசுரத்தில் இராமாவதாரத்தில் ஈடுபடுகிருர். 'கொடிய காட்டு வழியில் காலால் நடந்து சென்று பயங்கரமான அநேக மிருகங்கள் வாழும் இடமெல்லாம் சென்று கொடிய இராவணனே வேருடன் மாய்த்தாய். உனக்குத் துணை நீ கையில் ஏற்றி இருக்கும் அழகிய வில்லும், அம்பும் ஆகும். முதல் நாள் யுத்தத்திலேயே மிகப் பலம பொருந்திய இராவணனே நன்கு அவமானம் அடையச் செய்து விட்டாய். கடினமானதும், ஒருவராலும் போக முடியாதபடி நீண்டும், உயர்ந்தும் இருந்த மதில் சுவர்களே உடைய இலங்கையை அடைய ஆழமான சமுத்திரத்தில் மலேகளாலும், மரங்களாலும் மிக பலமான அணையைக் கட்டி இலங்கையில் (சேது பந்தனம்) கொடிய, கடிய செயல்கள் புரிந்து வந்த இராவணனின பத்துத் தலேகளேயும் வெட்டித் தள்ளியவனுன இராமன் வாழும் சாளக் கிராமம் அடை நெஞ்சே' என்கிருர் தன் நெஞ்சைப் பார்த்து.

**அடியார்க்கடியவன்,**
**கேத்தாண்டபட்டி.**

இரண்டாம் பாசுரத்தில் 'சதுரங்க சேனேகளுடன் கூடிய (தேர், யானே, குதிரை, காலாட்) இராவணனது இலங்கையை சரத்தினுல் பொடிப் பொடி செய்து இலங்கையே இல்லாமல் செய்தவன் வாழும் இடம் சாளக் கிராமம். பூலோக வாசிகளும், விண்ணுலக வாசிகளும் தொழுவதும் இயற்கை மனம் கமழ்வதுமான சாளக் கிராமம் சென்றடை நெஞ்சே' என்கிருர்.

மூன்ருவது பாசுரத்தில் - ஸப்த ஸாகரங்களுமாகவும், ஸப்த பர்வதங்களுமாகவும், எண்டிசைக்கும் பல யுகங்களுக்காகவும் மற்றும் சந்திரன், சூரியன், இருட்டுமாகவும், விரோதி ஸம்ஹாரத்திற்காகவும் தம் திருக்கையில் திருவாழி என்னும் சக்கரத்தை தரித்திருப்பவன் வாழும் (நின்ற திருக்கோலத்தில்) இடம் சாளக்கிரா

மம் ஆகும். இவனே தேவர்களை காப்பாற்றியும், விரோதிகளை அழிப்பவனுமாக இருப்பவன் ஆகிறான். அத்தகு இந்த பிரதேசம் வெகு இயற்கை காட்சியுடனும், பல நீர் நிலைகளாலும நிறைந்த இடமாகும் என்கிறார்.

நான்காம் பாசுரத்தில்-திருக்குடந்தையில் வாழும் உத்தமனும் கொடிய அரக்கர் கூட்டங்களை தன் வளைந்த வில்லினால் (கூர்மையான அம்பினால்) சதுரங்க படைகளுடன் இருக்குமிடம் தெரியாமல் அழித்தவனும், எப்பொழுதும் வற்றாமல் நீர் நிலைகளால் (காவிரி ஆற்றில்) சூழப்பட்ட திருப்பேர் நகரில் சயனத் திருக்கோலத்தில் ஸேவை தருபவனும், ஆயிரமாயிரம் பக்தர்களை உடையவனும் மற்றும் வண்டுகளால் சூழப்பட்ட வாடாத திருத்துழாய் மாலையை எப்பொழுதும் சாத்திக் கொண்டு இருப்பவனை தரிசிக்க வயல் வெளிகளால் சூழப்பட்ட சாளக் கிராமம் என்னும் ஊரை அடைவாய் என்கிறார்.

ஐந்தாம் பாசுரத்தில் - 'ஏ, புருஷோத்தமா! நீ எப்பேர்ப் பட்டவன் என்பதை கூறுகிறேன் கேள். உன் மீது ஆசையால் மேல் வந்து விழுந்த சூர்ப்பணகையைஅவள் அலறித்துடிக்கும்படித் தம்பியைக்கொண்டு அவள் மூக்கை வாளால் அறுத்து பங்கம் செய்து அனுப்பியவன் நீயே ஆவாய். பிரகாசம் உள்ள திருவாழி ஆழ்வாரை உடையவனும் நித்திய சூரிகளுக்காக ஸேவை தருபவனும், ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் ஆயர்புற மக்களுக்கும், பசுக்கூட்டங்களுக்கும், இந்திரனால் ஏற்பட்ட ஆபத்தை விளைவிக்கக்கூடிய மழையைகுன்றெடுத்துக் குடைபிடித்துத் தடுத்துக்காத்தவனும் நீயே. இப்படிப்பட்டவன் வாழுமிடமான பற்பல தடாகங்களால் சூழப்பட்டுஅழகுதரும்சாளக்கிராமம்அடைவாய் நெஞ்சே' எனகிறார்.

ஆறாம் பாசுரத்தில்-ஏ, கிருஷ்ணா! நீ ஒரு காலத்தில் கொடிய கம்சனால் ஏவப்பட்டு குழந்தையாகிய உனக்கு முலைப்பால் கொடுத்துக் கொல்ல வந்தவளாகிய பூதனை என்ற அரக்கியை அவள் கொடுத்த பாலையும் உறிஞ்சி, அவளையும் மாய்த்தவன் ஆகிறாய். தவிர நீ ஆயர்பாடியில் அவர்கள் வீட்டில் திருடித்தின்ற பாலுக்கும், தயிருக்கும்தான் அளவு உண்டா. வெண்ணை உண்ட ப்ரியன் நீ. மேலும் பரிசுத்தமான சிறிய உருவில் (குள்ள உருவில்) மகாபலி சக்கரவர்த்தி செய்யும் யாகத்திற்குச் சென்று தானமாக மூவடிமண் வேண்டி அவன் கொடுத்தேன் என்றதும் அதே ஸமயத்தில் பெரிய தொரு உருவமாய் (திரிவிக்கிரமன்) வளர்ந்து இரு உலகங்களையும் ஈரடியாலும் மற்றும் ஓர் அடியால் அவனையும் ஆட்கொண்டவனல்லவா நீ. உன்னுடைய நிறமோ என்றால் காயாம்பூ போன்றது (நீலமேக சியாமளன்) அப்படிப்பட்ட சாளக்கிராமம் அடைவாய் நெஞ்சமே' என்கிறார்.

ஏழாம் பாசுரத்தில் மேலும் அவன் செய்த பற்பல செயல்களைக் கூறுகிறார் ஆழ்வார். 'மூவுலகங்களும் நடுங்கும் அளவிற்குப் பற்பல வரத்தின் பலத்தால் திமிர்ப்பிடித்து எல்லோருக்கும் கொடுமையை விளைவித்து வந்த இரணியனை அவன் தன் மார்பகத்தை பிளந்து சிங்க உருவில் அவன் இரத்தத்தையும் உறிஞ்சி, அவன் உயிரை மாய்த்து உலகிற்கு நன்மை செய்து வாழுமிடம் இதுவே. மேலும் அவர் ஒருவரே பற்பல உருவாய் (சந்திரன், சூரியன், ஆகாசம், பூமி, அக்னி, காற்று, மலை, கடல்) இவ்வுலகத்தில் நிறைந்திருப்பவன் ஆகிறார். அவரே இங்கு அர்ச்சையில் அதி அற்புதமாக சேவை தருகிறார். அவனை அடைவாய் நெஞ்சமே' என்கிறார்.

எட்டாவது பாசுரத்தில் 'சுடுகாட்டின் சாம்பலை பூசிக்கொண்டிருக்கும் (திருநீர்) இறந்தவர்களின் எலும்புகளை மாலையாக போட்டுக் கொண்டு இருப்பவனும், கபாலி என்ற பெயரை உடையவதுமான சிவபிரான் உன்னிடம் கபாலத்துடன் (மண்டை ஓடு) வந்து பிச்சை கேட்க அந்த கபாலத்தை உன் உதிரத்தினால் நிறைத்து அவனுடைய சாபத்தை தீர்த்தவன் வாழுமிடம் சாளக் கிராமமே' என்கிறார்.

ஒன்பதாவதுபாசுரத்தில் "எல்லாம் கற்றறிந்த பெரியோர்களும் வேதம் ஓதிய உயர்குல பிராம்மணர்களும், மற்றும் மேலுலகம் சென்று நித்திய சூரிகளாய் திகழ்பவர்களும், இப்படியாக பலரும்கோஷ்டியாக (வரிசைக் கிரமமாக) 'ஏ சாளக்கிராம நாதனே! எங்களுக்கு அருள் செய்ய வேண்டும்' என்று வேண்டி தோத்திரங்கள் பாடி, ஆடிக்களித்து நிற்கும் ஊரே சாளக் கிராமம் ஆகும். இச்சாளக்கிராமம் சோலைகள் பல நிறைந்ததாகவும், மலைகளால் சூழப்பட்டதாகவும், நீர் நிலைகளால் (கண்டகி ஆறு) நிரம்பி வழிவதாகவும், (என்றும் வற்றாமல் இருப்பதால்) அதில் வாழும் கயல், கெண்டை போன்ற மீன்கள் துள்ளி விளையாடுவதும் காணக் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது" என்கிறார்.

கடைசியாக பத்தாம் பாசுரத்தில் அதன்பலத்தைச்சொல்லிமுடிக்கிறார். 'இயற்கை அழகு நிரம்பிய சாளக் கிராமத்திற்குக் கட்டாயம் செல்லுங்கள். அங்கே சாளக் கிராம மூர்த்தியாக காட்சி தரும் எம்பெருமான் அழகைக் கண்டு அனுபவியுங்கள். இது ஸ்ரீ வைகுண்ட வாசிகளாக நித்திய சூரிகளால் பரமபத நாதனின் ஆயிரம் திருநாமங்களைச் சொல்லி துதிப்பதற்கு ஒப்பானதாகும். (ஸஹஸ்ர நாமத்திற்கு இது சமமாகும்) ஆக இப்படி என்னால் பாடப்பட்ட இப்பத்து பாசுரங்களை வாயால் எப்பொழுதும் பாடி தோத்திரம் செய்து அவன் திருவடிகளில் சரணடையுங்கள்' என்றுகூறி பாசுரத்தை தலைக்கட்டுகிறார் நம் கலியன். இனி மேலே சாளக்கிராமம் சென்றடையும் மார்க்கத்தையும் பார்ப்போம்.

**சாளக்கிராமம் செல்லும் வழி :**

சாளக்கிராமம் என்று ஆழ்வாரால் மங்களா சாஸனம் செய்யப்பட்ட

இதை முக்திநாத் என்று சொல்வது வழக்கம். இவ்வூர் தற்சமயம் நேபாள தேசத்தைச் சேர்ந்தது. சென்னையிலிருந்து நேராக கோரகபூர் செல்ல வேண்டும். (Goragpur)

கோரக்பூர் பெரிய ஜங்ஷனாகும். அங்கிருந்து வேறு ரயிலில் மாறி நௌதான்வா (Nowdanva) என்கிற நேபாள சேதத்து எல்லை போய்ச்சேர வேண்டும். இங்கிருந்து நேபாள தேசம் ஆரம்பம் என்று கொள்ளலாம். அங்கிருந்து வேறு ஒரு வண்டியில் போகரா (Bogra) என்னும் ஊர் அடைய வேண்டும். இது சுமார் ஆறு அல்லது ஏழு மணி நேர ப்ரயாணம். இங்கிருந்து சுமார் 70-80 மைல் ப்ராயணம் (நடையாகும்) விமானம் மூலம் நாம் சென்று அடைய வேண்டிய இடம் ஜோம்சம் (Jomsum) என்று ஊர்.

போக்ராவிலிருந்து வாரத்திற்கு ஐந்து நாடகள் விமானம் போகிறது. ஒரு நாளைக்கு மூன்று தடவை சென்றும் மூன்று முறை திரும்பிவிடுகிறது. முதல் விமானம் காலை ஆறு மணிக்கு. எட்டு மற்றும் ஒன்பது மணிக்கு இரண்டாவது, மூன்றாவது விமானங்கள் புறப்பட்டுச் செல்கின்றன. பயண நேரம் 20 நிமிடங்கள். இதில் காலை 6 மணிக்குச் செல்லும் முதல் விமான சர்வீஸ் நேபாள அரசாங்கத்தால் நடத்தப்படுகிறது. இதில் சார்ஜ் மற்ற இரண்டு சர்வீஸ்களைக் காட்டிலும் குறைவு. இதற்கு சார்ஜ் சுமார் 200 நேபாள ரூபாய். மற்ற இரண்டு விமானங்களும் தனியார் நிறுவனங்களைச் சார்நதது. இதற்கு கட்டணம் ரூபாய் 700 (நேபாள ரூபாய்) வசூலிக்கப்படுகிறது. எல்லாம் மலைகள் நிறைந்த இயற்கை அழகுடன் காட்சி அளிக்கிறது.

ஜோம்ஸி என்ற ஊர்தான் முக்திநாத் செல்லும் மலையடிவாரம். அங்கிருந்து நாள் ஒன்றுக்கு ரூபாய் நூறு கொடுத்தால் நம்மை அழைத்துப் போக ஆட்கள் வருகிறார்கள். அந்தப் பிரயாணம் மூன்று நாட்கள். இவர்கள் மிகவும் பொறுப்பாகவும், ஜாக்கிரதையுடனும் நம்மை அழைத்துப் போகிறார்கள். துணையிலலாமல் தனியாக நாம் மட்டும் செல்வது மிகவும் கடினம். மைல் 24 ஆகின்றது. மலையின் உயரம் சுமார் 1,600 அடிகள். ஆக போக வர 48 மைல் தூரம் நடகக வேண்டும். இதைத் தவிர வேறு மார்க்கம் கிடையாது. இவ்வழியில் இரண்டு அல்லது மூன்று இடங்களில் மட்டும்தான் சாப்பிடுவதற்கு உணவு கிடைக்கும். பால் இல்லாத டீ மற்றும் காபி கிடைக்கும். வழி மிகவும் கஷ்டமானது. மனதில் திடமிருந்தால் தான் செல்ல முடியும். இதற்கு துணையாக பக்தியும் இருக்க வேண்டும். மிகவும் ஏற்றமும், இறக்கமும் நிறைந்த குறுகலான பாதை. வழி காட்டிகள் மிகவும் உற்சாகமாகவும், கவனமாகவும் நம்மை வழிநடத்திச் செல்கிறார்கள். சாளக்ராமம சென்றடைந்த நம்மை எம்பெருமான் கண் குளிர கடாக்ஷிப்பான் என்பதில் சந்தேகமில்லை.

முக்தி நாராயணன் என்பது பெருமாளின் திருநாமம். பஞ்சலோகத்திலான் ஆனவர். பத்மாஸனத்தில் வீற்றிருந்த திருக்கோலத்தில ஸேவை. பெருமாளின் கீழ் முக்தி நாராயண சாளக்ராமம் உள்ளது. மற்றும் மஹாலக்ஷ்மி, ஸரஸ்வதி,உமையுடன் கூடிய பரமேஸ்வரன், குபேரன் முதலியவர்களும் ஸேவை தருகிறார்கள். கண்டகி நதி பெருமாளைச் சுற்றியும், பெருமாளின் திருவடியின் கீழேயும் ஓடுகிறது.

பக்கத்திலேயே ஜ்வாலாமுகி தாயார் ஸன்னதியுள்ளது. தாயாரின் குளிர்ந்த பார்வை நம் வழிப் ப்ராயண ச்ரமங்களையெல்லாம் தீர்த்துவிடும்படியாக இருக்கிறது. தாயார் திருவடியின்கீழ் ஓடும் கண்டகி நதி அற்புத அதிசய காட்சியாகும். அந்த நதி ஜலத்தில் நெருப்பு (ஜ்வாலை) எரிகிறது. கொழுந்துவிட்டு நெருப்பு ஜலத்தின்மீது எரியும் காட்சி வேறு எங்குமில்லாத ஒரு காக்ஷியாக காண போரை அதிசயத்தில் ஆழ்த்தும். ஜலத்தின்மீது நெருப்பு எரிவது நமக்கு தெரிகிறது.

சாளக்ராம மூர்த்திகள் எங்கும் கிடைப்பதில்லை. கண்டகி நதியில் பழக்கப்பட்டவர்கள் மூழ்கி எடுத்தால் பல கற்களில் அதிசயமாக ஒன்று தான் சாளக்ராமம் கிடைக்கும் (சாளகராமத்தில பகவான் எப்பொழுதும் நிரந்தர வாஸம் செய்வதாக ஸாஸ்த்திரம் கூறுகிறது). நம் பெரியவர்கள் வெளியூர் செல்லும் பொழுது திருவாராதனம் செய்ய முடியாமல் போகிறதே என்ற காரணத்திற்காக சாளக்ராம மூர்த்தியை அரிசியில் ஏள்ளப் பண்ணிவிட்டு வெளியூர் சென்று வருவதை நாம் இன்றளவிலும் கூட காண்கிறோம். சாளக்ராம மூர்த்திகளை அங்கு சில பேர் விற்கிறார்கள். அவர்களிடம் விலைக்கும் வாங்கிக் கொள்ளலாம். ஆனால் அது போன்று கிடைப்பது அரிது. மற்ற படி இயற்கைக் காட்சிகளுடன் சேர்ந்த ஜ்வாலாமுகி சமேத ஸ்ரீ முக்திநாதனை கண் குளிர ஸேவித்து இப்பிறவியெடுத்த பயனடைந்து நலம் பெறுவோமாக.

மேலும் துவாரகையில் ஸ்ரீ கண்ணனை கோபியர்கள் முந்தானையில் முடிபோட்டுக் கொண்டு தாங்கள் சென்றவிடமெல்லாம் அழைத்துச் சென்றது போல இச்சாளக்கிராம மூர்த்திகளை நாமும் ப்ராயணங்களில் எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் செல்லலாம். அவன் மிக சுலபன் என்பதையே இது காட்டுகிறது.

இதை படிக்கும் அன்பர்களாகிய வாசகர்கள் ஏற்கனவே சாளக்ராமம் சென்றவர்களாயின் அதை நினைவு படுத்திக் கொள்ளலாம். செல்லாதவர் இனி எப்படியாவது செல்ல முயற்சி செய்யலாம். இரண்டும் முடியாதவர்களானால் தன் நெஞ்சினால் சாளக்கிராமம் சென்று அடையலாம். வசதியிருக்கும், உடம்பில் திடமிருக்கும் பலர் சூழ்நிலையின் காரணமாக போகாமலிருப்பவர்களும் பயனடைய அவர் தம் நெஞ்சை அனுப்பி வைப்பதில் ஒருவிதமான கஷ்டமும், நஷ்டமும் கிடையாதல்லவா? ஆக ஆழ்வாரின் பாசுரம் எந்த விதத்திலாவது நம்மை சாளக்கிராமம் சென்றடைய வழி செய்யும். இதில் கொஞ்சமும் ஸந்தேகமில்லை.

ஆழ்வாரின் பாசுரமொன்றைக் காண்போம்.

கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்துபோய்
சிலையும் கணையும் துணையாகச்
சென்றான் வென்றிச் செருக்களத்து
மலைகொண்டலை நீரணைகட்டி
மதிள் நீரிலங்கை வாளரக்கர்
தலைவன், தலைபத்தறுத்துகந்தான்
சாளக்கிராம மடைநெஞ்சே!

பெரிய திருமொழி - 1:5:1 : ★

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

இளை நாச்சியார்

பெரியாழ்வாரின் திருமகள் ஆண்டாள் போன்று இந்நாச்சியாரும் குலசேகர ஆழ்வாரின் திருமகள். இறைவனிடம மாருத அன்பும் பக்தியும் கொண்டவள். நீளாதேவியின் அம்சம் எனும் இவள் இறைவனை மறப்பாளா? 'அரங்கனைக் காண்பது என்று' என்று ஏக்கமுற்ற தந்தை போன்று இவளும் அவனை என்று காண்பது என்று ஏக்கமுற்ருள். ஏக்கம் காதலானது, காதல் துயரமானது.

திருமகளின் திருவுள்ளம் அறிந்த ஆழ்வார் அவளை அரங்கனிடம் கொண்டு சென்று அவனுக்கே மணமுடித்து வைத்தார். அவளது அன்புப் பெருக்கில் திளைத்த அரங்கன் அவளைத் தன்னுடன் இரண்டற இணைத்துக் கொண்டான். இன்றும் இவள் இறைவனுடன் கோவில் கொண்டுள்ளாள்.

துலுக்க நாச்சியார் :

இவள் தில்லி பாதுசாவின் மகள். துருக்கர்கள் கொள்ளையிட்ட போது அவர்களிடம் இராமப்பிரியன் எனும் சிறப்புற்ற உற்சவமூர்த்தியும் கிடைத்தது. அம்மூர்த்தி இவளுக்கு ஆடற்பொருளானது. துருக்கர் இனத்தவளானுலும் இவள் அம்மூர்த்தியிடம் ஆராக்காதல் கொண்டாள். இராமப்பிரியனே தன் மணவாளன் என்று கருதினுள். பள்ளியறையில் அதை உடன் வைத்துக் கொண்டு நிவேதனம் படைத்து ஆராதனை செய்து வந்தாள்.

இறைவன் ஆணைப்படி இராமப்பிரியனை கொண்டு செல்ல இராமாநுசர் அங்கு வந்தார். அரசன் 'இங்கு இருப்பது உங்கள் பெருமாள் என்ருல் அழைத்துச் செல்லுங்கள்' என்ருன். இராமாநுசர் அழைத்தார். அவனும் வந்தான். அவனை திருநாராயணபுரம் அழைத்துச் செல்ல இராமாநுசர் ஆயத்தமானுர். மூர்த்தியைக் காணுத நாச்சியார் வருந்தினுள்; உறக்கம் துறந்தாள்; உடல் மெலிந்தாள்: காதலால் துயருற்ருள். மகளின துயரை அறிந்த மன்னன் அவளின் துயரைக் கூறி இராமப்பிரியானைத் திருப்பித் தருமாறு இராமாநுசரிடம் வேண்டினுன். அவர் தர மறுத்தார். வேறு வழி இல்லை என்று அறிந்த மன்னன் அரசகுமாரி உயிருடன் இருந்தால்போதும் என்று எண்ணி இராமப்பிரியனுடன் அனுப்பி வைக்க அவளை இராமாநுசரிடம் அடைக்கலமாகத் தந்தான்.

இராமப்பிரியனுடன் துலுக்க நாச்சியாரும் பல்லக்கில் திருநாராயணபுரம் நோக்கி கொண்டுசெல்லப்பட்டாள். அப்பொழுது இடையில் ஒரு பெரும் கொள்ளைக் கூட்டம் வழி மறித்தது. மீண்டும் இராமப்பிரியனைப் பறிகொடுக்க நேர்ந்துவிடுமோ என்று அஞ்சிய இராமாநுசர் அவனையும் அரச குமாரியையும் உடன் கொண்டு அருகில் இருந்த ஒரு சேரியில் மறைந்து கொண்டார். சேரியினர் கொள்ளையர்களை எதிர்த்து ஓட்டினர்.

பின்னர் சேரியினர் துணையுடன் திருநாராயணபுரம் அடைந்தார் இராமாநுசர். இராமப்பிரியனுடன் அரசகுமாரியும் வருகிருர் என அறிந்த மக்கள் அவளைக்காண ஆவல் கொண்டனர். அரச குமாரியைக் காட்டுவதற்காகப் பல்லக்கின் திரையை விலக்கினுர் இராமாநுசர். ஆனுல் அங்கு அரசகுமாரியைக காணவில்லை. இராமப்பிரியன் மட்டும் பன்மடங்கு பொலிவுடன் காணப்பட்டான். அரசகுமாரி இல்லாததால் எல்லோரும் பதற்றம் அடைந்தனர். வரும் வழியிலேயே இராமப்பிரியனுடன் அவள் ஐக்கியமாகிவிட்டாள் என்ற உண்மையை உணர்ந்தார் இராமாநுசர். மக்கள் வியப்பில் ஆழ்ந்தனர்.

அவள் இன்று துலுக்க நாச்சியார் என்று அழைக்கப்படுகிருள். இன்றும் திருநாராயணபுரத்தில் பெருமானின் திருவடி நடுவில் இச்நாச்சியார் விளங்குகிருள்.

இச்செய்தி அறிந்த மன்னன் மாப்பிளளையான இராமப்பிரியனுக்குப் பெரும் செல்வத்தைச் சீதனமாக அளித்தான். நாச்சியாருடன் வந்த மன்னன் மகனும் இராமாநுசருக்கு மாணவன் ஆனுன். துருக்கர் படையினரும் வைணவத்திற்கு உரியவர் ஆயினர். துருக்கர் இனத்து கபீர் தாசரும் இந்நாச்சியாரை வணங்கி விட்டு திருவரங்கம் சென்றதாகக் கூறுவர்.

இவ்வாருக, தன் மீது பக்தியை மட்டுமின்றி காதலையும் கொண்டதால் திருமால் இந்நாச்சியார் நால் வருக்கும் அழகிய மணவாளனுகத் தோன்றி அவர்களின் கரம்பிடித்தான்; ஆட்கொண்டான்.

சூடிக்கொடுத்த நாச்சியார், உறையூர், நாச்சியார் இளைநாச்சியார் எனும் மூவரும் தமிழகத்தைச் சார்ந்தவர்கள். சேர மன்னன் குலசேகரன் மகளாக இளைநாச்சியாரும், சோழன் தர்மவர்மன் மகளாக உறையூர் நாச்சியாரும், பாண்டியன் வல்லபதேவன் மகளாக சூடிக்கொடுத்த நாச்சியாரும் (வல்லபதேவன் பெரியாழ்வாரின் தொண்டன் அதனுல் ஆண்டாளை அவன் மகளாகக் கூறலாம். ஆண்டாள் திருமணத்தின் போது வல்லபதேவன் பல பொருள்களையும் அணிகலன்களையும் தந்ததோடு பந்தல் அமைத்துத் தந்ததையும் ஆண்டாள் வரலாற்றில் காணலாம்) விளங்குகின்றனர். அதனுல் அவர்கள் சேர, சோழ, பாண்டிய நாட்டிற்கு உரியவர்களாவர். அம் மூவேந்தரும் தென்னுட்டிற்கு உரியவர்கள். ஆகவே அவ்வேந்தர்களின் மகளிரும் தென்னுட்டிற்கு உரியவர்களாவர். அவர்களை மணந்ததால் திருமால் தென்னுட்டிற்கே சிறப்புடையோன் ஆனுன்.

தென்னுட்டிற்கு உரிய திருமால் எந்நாட்டிவர்க்கும் உரியோன் ஆனுன் எவ்வாறு என்ருல், இடம், சமயம், மொழி, இனம், பழக்கவழக்கம் ஆகியவற்றில் முற்றிலும் வேறுபட்ட வடநாட்டு மன்னன் தில்லி பாதுசாவின் மக்கள் துலுக்க நாச்சியாரை அவளது பக்திக்காக மெச்சி அவளை விலக்காமல் திருமால் மணந்து ஆட்கொண்டதால், அதனுல் வடநாட்டவர்க்கும் உரிய தெய்வமானுன். ஆக திருமால் தென்னுட்டவர்க்கு மட்டுமின்றி எந்நாட்டவர்க்கும் உரிய இறைவன், எந்நாட்டவரும்போற்றும் தலைவன். இதை ஏன் நாம் பெருமையுடன் கூறக்கூடாது?

★

# ஸ்ரீராமஜென்ம பூமியின் சிறப்பு

வட இந்தியாவில் உத்திரப்பிர தேச மாநிலத்தில் அயோத்தி மாநக ரத்தில் தசரதச் சக்கரவர்த்தியின் மூத்த மகனாகத் திருமால் ஸ்ரீ ராமன் என்ற திருப்பெயரில் அவதரித்தது யாவரும் அறிந்ததே. ஸ்ரீராமன் அவ தரித்து ஆட்சி செய்த அயோத்தியில் ஸ்ரீ ராமனுக்காகக் கோயில கட்ட உள் ளது. ஸ்ரீராமன் கோயில் கட்ட இந்தி யாமுழுவதிலிருந்தும், வெளிநாடுகளி லிருந்தும் செங்கற்களை 30 நாட்கள் பூஜை செய்து அக்கற்களை அயோத்தி மாநகருக்கு பக்தர்கள் அனுப்ப இருக் கிறார்கள். தசரதச் சக்கரவர்த்தியும் அவருக்குப்பின் ஸ்ரீ ராமனும் ஆட்சி செய்த கோசல நாட்டின் சிறப்பையும் அந்நாட்டிலுள்ள அயோத்தி மாநக ரின் சிறப்பையும் கம்பர் தான் பாடிய இராமாயணத்தில் மிக அழகாகச் சித்தரித்துப் பாடியுள்ளார். அவற் றில் சிலவற்றை இங்குக் காணபோம்.

**சரயு நதியின் சிறப்பு :**

ஆடவரும் மக்களும் நெறி பிறழாத நேர்மையுடன் ஒழுகும் அறத்தாறு உடைய கோசல நாட்டை சரயு நதி யானது பாய்ந்து செழிப்பாக்குகிறது. சிவபெருமானது மாமனாராகிய இமய மலையில் சரயு நதி தோன்றி இடையில் பலபலவாறாகப் பிரிந்து கடைசியில் கடலில் கலக்கிறது. முதலில் ஒன்றாக இருந்த சமயம் பலதிறப்பட்ட ஆன் மாக்களின் நிலைமைக்கும், இடம், சுற்றம் ஆகியவற்றுக்கும் ஏற்றவாறு பல மதங்களாகப் பிரிந்து கடைசியில் ஒரே முடிவை அடைவதைப்போல எல்லா மதங்களுக்கும் தலைவனாக விளங்குபவர் ஒரே கடவுளாவார். உயிர் உடம்பைப் பாதுகாத்து வரு வதைப்போல சரயு நதியும் கோசல நாட்டின் பல பகுதிகளில் பாய்ந்து அந்நாட்டைச் செழிப்பாக்குகிறது.

**கோசல நாட்டின் வளம் :**

கோசல நாட்டு மக்கள் அனைவரும் கல்வியறிவுடைய சான்றோர்களா வார்கள். பருந்தோடு நிழலும் செல் லும் பாங்கைப்போல இசையும் பொருளும் இணைந்த பெரியோர்கள் செய்யும் பிரசங்கத்தைக் கேட்டு மக்கள் மகிழ்கிறார்கள். திருவிழா முதலிய காலங்களில் தம் வீட்டிற்கு வரும் விருந்தினர்களை வரவேற்று மன மகிழ்ச்சியடைகிறார்கள். முல்லை நில மக்கள் தோய்ந்த தயிரைக் கடையும் பொழுது மத்தின் ஓசை தெரியாத வாறு கைவளையல் ஓசை அதிகரிக்க வும் சிறிய இடை அசையவும் இடை யர் குல மக்கள் தயிர் கடைகிறார்கள். கோசல நாட்டில் வாழும் பெண்கள் கல்வியும் செல்வமும் ஒருங்கே பெற் றிருத்தலால் ஏழை எளியயவர் களுக்கு உதவி செய்தலும், பிரசங்கம் புரிதலும், கேட்டலும், இன்னிசை விருந்து அளித்தலும் ஆகியவற்றைத் தவிர அந்நாட்டுப் பெண்களுக்கு வேறு வேலை எதுவுமே இல்லை. மேலும் கோசல நாட்டில் கடல் வழி யாகக் கப்பலிலிருந்து அளவற்ற செல்வங்கள் குவிகின்றன. விளை நிலங்களிலிருந்து அளவற்ற தானியங் கள் நிறைகின்றன. சுரங்கங்களி லிருந்து விலையுயர்ந்த தங்கமும், இரத்தினங்களும் கிடைக்கின்றன. எல்லாக் குலத்தினரும் தத்தம் குல ஒழுக்கப்படி வாழ்க்கையை இன்ப முடன் நடத்துகின்றனர். இத்தகைய சிறந்த பொருளைத் தரும்பாடலாவது:

கலம் சுரக்கும நிதியம், கணக்கிலா,
நிலம் சுரக்கும் நிறைவளம், நனமணி
பிலம் சுரக்கும் பெறுதற்(கு)அரியதம்
குலம் சுரக்கும ஒழுக்கம் குடிக்கெலாம்

மேலும் கம்பர் கோசல நாட்டின் பெருமையைக் கூறியதாவது: அந் நாட்டு மக்கள் எல்லோரும் அழகுடை யவர்களாகத் தோன்றியதால் எங்கும் பொலிவே காணப்பட்டது. மக்களனை வரும் போலி ஒழுக்கமில்லாமல் உண் மை ஒழுக்கமுடையவர்களாக விளங் கியதால் எங்கும் நீதியே நிலவியது. அந்நாட்டில் வாழ்ந்தபெண்டிர் அனை வரும் அன்புள்ளம்கொண்டவர்களாக விளங்கியதால் பல அறங்கள் நிகழ்ந் தன. மேலும் பெண்டிர் கற்புடை யவர்களாக விளங்கியதால் எல்லாப் பருவ காலங்களிலும் தவறாது மழை பொழிந்தது.

மேலும் கோசல நாட்டில் பொய பேசும் மக்கள் இல்லாமையால் உண்மை என்ற ஒன்று இல்லை. பகை வர்களே இல்லாமையால் வீரம் என்ற ஒன்று அந்நாட்டில் இல்லை. ஏழைகள் எவருமே இல்லாததால் தருமம் செய் பவர்கள் யாரும் இல்லை. எல்லா மக் களுமே கல்வி அறிவு பெற்றிருந்த தால் அறிவுடைமை என்று அந்நாட் டில் இல்லையென்று கம்பர் சிறப்பித் துப் பாடிய அழகான பாடலாவது :

வண்மை இல்லை ஓர் வறுமை இன்மை யால்
திண்மை இல்லை நேர் செறுநர் இன் மையால்
உண்மை இல்லை பொய்யுரை இலா மையால்
வெண்மை இல்லை பல் கேள்வி மேவ லால்.

இத்தகைய பலவகை வளங்களையும், சிறப்புக்களையும் உடைய கோசல நாட்டின்கண் சிறப்புடைய நகராக விளங்கியது ஸ்ரீ ராமன் ஆண்ட அயோத்தி மாநகரமாகும். இனி அவ்வயோத்தி மாநகரத்தின் வளத் தையும், சிறப்பையும் பற்றிக் கம்பர் பாடிய திறத்தைக் காண்போம்.

புலவர். மு. மணி, எம்.ஏ.பி.எட்.
வேலூர்.

அயோத்தியின் சிறப்பு :

இந்நகரத்தைப்போல ஒரு நகரம் தேவலோகத்திலும் இல்லை எனலாம். நிலைபெற்ற அருளையும், தர்மத்தையும், தங்களுக்குத் துணையாகக் கொண்டு பெருந்தவம் செய்த ஞானியர்களாகிய மேலோர்களாகிய யாவரும் தங்களைப் பற்றுக்கோடாக அடைதற்குரிய பாற்கடலில் பள்ளி கொண்ட ஸ்ரீ விஷ்ணுவே இந்நகரில் ஸ்ரீ இராமனாக வந்து அவதரித்து அளவற்ற காலம் வீற்றிருந்ததால் இதைப்போன்ற உயர்ந்த சிறப்புடைய நகரம் தேவலோகத்திலும் இல்லை யெனலாம். அவ்வயோத்தியில் உள்ள கோபுரங்கள் மக்கள் அறிவினால் அளந்தறிய முடியாத வேதத்திற்கு ஒப்பாகும். வானுலகு வரை அது புகுவதால் அது தேவர்களுக்கு ஒப்பாகும். பொறிகளை அடக்கிய தன்மையை உடையதால் அது முனிவர்களுக்கு ஒப்பாகும். அந்நகரம் யாருமே அடைய முடியாத காவலை யுடையதால் கலைகளில் சிறந்த காளி தேவிக்கு ஒப்பாகும். யாருமே அடைய முடியாத தன்மையினால் சிவபெருமானுக்கு ஒப்பாகும். மேலும் அவ்வயோத்தியில் பலவகையான சிறப்புடைய மண்டபங்களிருந்ததைப் பாராட்டிக் கம்பர் பாடியதாவது :

மன்னவர் தரு நிறை அளக்கும்
மண்டபம்
புனைமென் நடையவர் ஆடும்
மண்டபம்
உன்னரும் அருமறை ஓதும் மண்டபம்
பன்னரும் கலைதெரி பட்டி மண்டபம்.

ஸ்ரீராமனின் தந்தையாரானதசரத மகா சக்கரவர்த்திக்குப் பல தேசத்து மன்னர்கள் கொண்டு வந்து செலுத்திய கப்பங்களை அளக்கின்ற மண்டபங்களும், நாட்டியமாடும் மகளிர் ஆடும் நாட்டிய மண்டபங்களும், வேதம் ஓதுவதற்காக அந்தணர்களுக்காகக் கட்டப்பட்ட வேதம் அத்தியயனம் செய்யும் மண்டபங்களும், பலவித புலவர்கள் தத்தம் கருத்துக்களைத் தெரிவிக்கக்கட்டப்பட்டபட்டி மண்டபங்களும் அயோத்திமாநகரில் விளங்கியதாகக் கம்பர் பாராட்டிப் பாடியிருக்கிறார்.

மேலும் மேகத்தின் ஒலியிலும் கடல் ஒலியிலும் மிகுந்து ஒலிக்கின்ற முரசுவாத்தியங்களையுடைய அயோத்தியில் கள்வர்களே யாரும் இல்லாததால் அந்நகரில் காவலே இல்லை. பிச்சையெடுப்போர் யாரும் இல்லை இல்லாததால் அந்நகரில் கொடையாளிகள் யாரும் இல்லை. அந்நகரில் கல்வியறிவுடைய சான்றோர்கள் வாழ்ந்ததைச் சிறப்பித்துக் கம்பர் பாடிய பாடலாவது :

கல்லாது நிற்பார் பிறர் இன்மையின்
கல்விமுற்ற
வல்லாரும் இல்லை, அவைவல்லர்
அல்லாரும் இல்லை
எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வ
மும் எய்தலாலே
இல்லாரும் இல்லை உடையார்களும்
இல்லை மாதோ !

அவ்வயோத்தி மாநகரத்தில் வாழும் ஆண், பெண் அனைவருமே கல்வி அறிவு பெற்றிருந்ததால் கல்வி கற்றவரும், கல்லாதவரும் என்ற பாகுபாடே அந்நகரில் இல்லை. எல்லா வகையான செல்வங்களும் எல்லா வகையான மக்களும் பெற்றிருந்ததால் அங்கு ஏழை, பணக்காரன் என்ற பாகுபாடே இல்லை.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த கோசல நாட்டையும், அதனுள்ளிருந்த அயோத்தி மாநகரையும் கம்பர் பலவாறுகச் சிறப்பித்துத் தன் இராமாயணமென்னும் ஸ்ரீ இராம சரிதத்தில் பாடியுள்ளார். ஸ்ரீ இராம சரிதத்தைக் கேட்பாரும் படித்தோரும் எல்லா வளங்களையும் பெறுவர். நாமும் ஸ்ரீ ராம ஜன்ம பூமியின் சிறப்பைப் படித்துப் பயன்பெறுவோமாக.



# திருவேங்கடம்

திரு. எம். என். திருமலய்யா,
சேலம்.

அழிவற்ற ஐசுவரியத்துக்கு அதிபதியாயிருக்கும் ஸ்ரீவேங்கடவாணன் காலம்காலமாக வேங்கடாசலத்தில்(பாவங்களைப்போக்கடிக்கும்மலை) ஆனந்தநிலையத்தில்வசித்து கொண்டு பக்தர்களுக்கு அனுக்ரகம் செய்து கொண்டிருக்கிறார். இந்நாட்டு மக்கள் அனைவருடைய உள்ளத்தையும் ஈர்த்திடும்திருத்தலம்திருமலை. பல்லாயிரக் கணக்கான பாமர மக்கள், அறிவாளிகள், விஞ்ஞானிகள் முதலானோர் நாள்தோறும் "ஸ்ரீனிவாசா, கோவிந்தா, முகுந்தா, மாதவா, பாலாஜி" என்று பலநாமங்களுடன் துதித்துக்கொண்டு அங்கு நின்ற கோலத்தில் காத்திருக்கும் பகவானிடம் மனக்கவலைகள் யாவும் ஒப்புவித்து சாந்தி பெற்று திரும்புகிறார்கள்.

குடும்பம் குடும்பமாக வேண்டுதல்கள் கொண்டு கன்னங்களில் அலகுகள் குத்திக் கொண்டும், மஞ்சள் உடைகள் அணிந்தும் "கோவிந்தா கோவிந்தா" என்று கூறி உற்றார், உறவினர்கள் சூழ தங்கள் இருப்பிடத்திலிருந்து மேள தாளங்களுடன் ஊர்வலமாக வந்து பின்பு திருவேங்கடமலையேறி பாபங்களைப்போக்கிக் கொண்டுதிரும்புகிறார்கள். ஊர்வலம் வரும் சமயத்தில் ஒரு சாரார் அவர்களுக்குக் காணிக்கைப்போட்டு துளசிபிரசாதங்கள் பெற்று வணங்கி ஓரமாக நின்று வழியனுப்புகிறார்கள், வாகன வசதிகள் ஏற்படாத பண்டைய நாட்களில் இரட்டை மாட்டு வண்டியில் செல்லுவார்கள். அடிவாரத்திலிருந்து மலைப் பாதை வழியாக புருஷோத்தமனை ஒரே மனதாக தியானம் செய்து கொண்டே ஏழு மைல் உயரம் எந்த விதமான சிரமமில்லாமல் ஏறிச் சென்று ஏழுமலையானை மனங்குளிர தரிசனம் செய்து கோரிக்கை காணிக்கைகளை உண்டியலில் செலுத்தி மனக் கவலைகளை அங்கேயே விட்டுவிட்டு "எல்லாம்லல்ல பரம புருஷனே, திருவேங்கடநாதனே எங்கள் கோரிக்கைகள் யாவும் நிறைவேற்ற வேண்டும். துன்ப நிவாரணம் உண்டாவுதுடன் மீண்டும் உனது தலம் வந்து வணங்குகிறோம்" என்று தியானிக்கிறார்கள்.

இவவிதம் மலைமேல் வீற்றிருக்கும அண்ணல் ஸ்ரீ வேங்கடநாதசுவாமியைக் காட்டிலும் அவனது திருமார்பில் என்றும் உறைந்து திருச்சானூரில் வாசம் கொண்டிருக்கும் ஸ்ரீ அலர்மேல்மங்கைத் தாயார் வழிபட வருபவர்களுக்கு அதிகமாக அருள்புரிகிறாள். வேதவதி பத்மாவதி தாயார் என்ற நாமங்களும் உண்டு. மகரிஷிகள் வேதம் சொல்லும் காலத்தில் அவள் தோன்றியதால் 'வேதவதி' என்ற காரணப்பெயராகும். ஸ்ரீ ஆண்டாள் போலவே ஸ்ரீமந் நாராயணனையே மணந்து கொள்ள வேண்டுமென்ற உறுதி மனப்பான்மை கொண்டிருந்தாள் வேதவதி. இமய மலைச் சாரலில் தவம் செய்தபோது இராவணன் இச்சிக்க அப்போது அவள் சாபமிட்டு அக்னியுடன் சேர்ந்தாள். இராமாயணத்தில், ராம லட்சுமணர்கள் இல்லாத சமயம் சீதா தேவியை அபகரிக்க இராவணன் வந்தான். இதை அக்னி தேவன் அறிந்து நிஜ சீதையை பாதுகாத்து வேதவதியை சீதை வேடத்தில் இருக்கச் செய்தான் என்பது புராண வரலாறு. அந்த வேதவதியே இந்த பத்மாவதி தேவி. ஸ்ரீதேவியின் அவதாரம்.

நம் நாட்டில் கடன் வாங்கி கலியாணம் செய்து கொண்ட கடவுள் யார் என்றால் திருப்பதி வெங்கடாசலபதியைத்தான் சொல்லுவார்கள். அரக்கர்களிடமிருந்து பூமாதேதயை மீட்டபிறகுவைகுண்டத்திற்குத்திரும்பாமல் மலைமேல் இங்கேயே தங்கிவிட்ட நாராயணனையே கணவனாக அடைய பத்மாவதி தேவி தவமிருந்தாள். மலைமேல்நின்ற வேங்கடநாதன் கலியாண செலவுக்கு குபேரனிடம் ஒரு கோடியே பதிநான்கு லட்சம் பொன் கடன் வாங்குகிறார். கலியுக முடிவில் அசலை திருப்பித்தருவதாக ஒப்புக்கொண்டு சிவன், பிரம்மா சாட்சிகளுடன் கடன் பத்திரம் எழுதியும் கொடுத்துவிடுகிறார். வட்டியை இப்படி மக்களின் பிரார்த்தனைகள் மூலம் வாங்கிக்கொள்கிறார் என்கிறார்கள். திருப்பதி உண்டியலில் செலுத்தப்படும் காணிக்கைகள் கலாசாலைகள், பள்ளிகூடங்கள், தங்கும் விடுதிகள், அனாதை இல்லங்கள், அன்னதானம் முதலிய தர்ம காரியங்களுக்குச் செலவிடப்படுகிறது.

கலியாணம் செய்துகொண்ட வேங்கடேங்வரன் ஏன் தேவியுடன் இல்லாமல் பிரிந்து மலைமேல் தனியாகஇருக்கிறார் என்பதற்குசெவிவழியாக வரும் வேடிக்கைக் கதை ஒன்று சொல்லப்படுகிறது. மணப்பெண் பத்மாவதி கணவன் வீட்டுக்கு வரும் போதுநிறைய சீதனம்கொண்டு வந்தாள். ஆனால் ஒரே ஒரு பொருள் தூக்கி எறியவேண்டிய பொருளான கருவேப்பிலையினைக்கொண்டுவரவில்லை ஸ்ரீநிவாசன் இந்தப்பொருள் இல்லாமல் ஏன் வந்தாய் என்று கோபித்துக் கொள்ளமணப்பெண் ரோஷத்துடன் தாய் வீட்டுக்கு மலையடிலாரத்திலிருந்து 3 மைல் தூரமுள்ள திருச்சானூருக்கு போய்விட்டாளாம். (திருமலைக்கோயில் பிரஸாதங்களிலும் கருவேப்பிலையினைப் பயன்படுத்துதல் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும்.) அங்குத் தங்கியவள்தான், கணவன் வீட்டுக்குத் திரும்பவே இல்லை. ஏன் இப்படி செய்தோம என்று பிற்பாடு தோன்றியதாம் ஸ்ரீனிவாசனுக்கு. கர்ம பூமி வாசிகள்தானே! தினமும் நள்ளிரவில் அம்மையார் இருககுமிடம் போகிறார். "தீராத வினையெல்லாம் தீர்த்து வைப்பாய் கோவிந்தா" என்று வேண்டிடும் மக்களின் வினைகளை அகற்றிட அதிகாலையில் திருமலையை அடைந்துவிடுகிறார்.

திருப்பதி திருமலை செல்லும்பக்தர்கள் முதலில் பத்மாவதி தாயாரின் அருள் பெற்று பிறகு மலைமேலிருக்கும் திருவேங்கடநாதனைத் தரிசிப்பது முறையாகும்.

திருவேங்கடமுடையான் திருவடிகளே
சரணம்

(12 ம் பக்கத் தொடர்ச்சி)

அப்பொழுது கிருஷ்ணன் நீக்கினான் தன் சக்ராயுதத்தை; அர்ச்சுனன் கண்டான் பகற பொழுதை; உடனே ஒரு அம்பினால் கொன்றான் ஜயத்திரதனை.

இவ்வரலாற்றினைத்தான் மேற குறிப்பிட்டபாடலில் குறிப்புணர்த்துகிறார் ஸ்வாமி தேசிகன். அவர் மேலும் கூறுகிறார்: ஆதிசேஷனும் பெரிய திருவடியும் பக்தியுடன் ஏந்திக் கைங்கர்யம் செய்கின்ற எம்பெருமான் திருவடிகள் இரண்டையும் (அடியேனும் கைங்கர்யம் செய்யும்படி) கொடுத்து சோர்வடையாத மனத்தினையும் கொடுத்தருளினான்.

அரவும் கருடனும் அன்புடன ஏந்தும் அடியிரண்டும்
தர எம் தமக்கு அருளால் தளரா மனம் தந்தனனே

—அமிருதாசுவாதினி 32

சக்ராயுதத்தால் மறைந்த சூரியனை மீண்டும் நீக்கிப் பகலை உண்டாக்கியது—அர்ஜுனனுக்கு உடற்பற்றாலேற்பட்ட ஆணவத்தால் இழந்த ஆத்ம தத்துவ ஞானத்தை மீண்டும் கிருஷ்ணன் உண்டாக்கியதைக் குறிப்புணர்த்தும்

அந்த அர்ச்சுனனைப் போல் ஆத்ம தத்துவ ஞானத்தை இழந்த அடியேனுக்கும் மீணடும் அதனை உண்டாக்குவதற்காக அவன் திருவடிகளைக் கொடுத்து அவைகளுக்குக் கைங்கர்யம் செய்வதற்காக நிலைத்த மதியினையும் கொடுத்தருளினான் எனகிறார் ஸ்வாமி தேசிகன்.

திருவேங்கடமுடையானின் வலது தோளில் எழுந்தருளியுள்ளது — அருளாலே நிரம்பின திருச்சக்கரம். அது சினத்தோடு அழிக்கும — எதிரிகளை அழிக்கும் போது. அருளோடு வாழ்வளிக்கும்-அடியார்களை வாழ்விக்கும் பொழுது. அதற்கு துர்வாசமுனியிடமிருந்து அம்பரீஷனைக் காப்பாற்றியதே உதாரணமாகும்.

கருணை நிறைந்த திருச்சக்கராயுதத்தைக் கொண்டு பரந்த விண்ணுலகிலும் மண்ணுலகிலும் இருளையொத்த கொடிய தொழில்கள் நிகழாதபடி தீயோர்களை அழித்து உலகத்தைக காத்தருள்கிறீர் என்கிறார் ஆழ்வார்.

"அருள ஆர் திருச் சக்கரத்தால்
அகல் விசும்பும நிலனும
இருள ஆர் வினை கெட
செங்கோல் நடாவு தீர்"

(திருவிருத்தம் 33)

அம்பரீஷன் விஷ்ணுவை ஆராதிக்க ஒரு சமயம் துவாதசி விரதமிருந்தான். அச்சமயம் அவனுக்கு விருந்தாளியாக, 'சாபத்தாலும் சாப மொழி தன்னால் வளரும் தவத்தாலும் கோபத்தாலும்' பேர் படைத்த கொடிய முனிவன் துருவாசர் வந்து சேர்ந்தார்.

அம்பரீஷன் வரவேற்று தன்னோடு விரதத்தில் பங்கேற்று முடித்து வைக்க வேண்டுமென வேண்டினான். அவரும் சரியென்று உரைத்துவிட்டு நீராடுவதற்குச் சென்றவர் வரவே இல்லை. துவாதசி முடியும் நேரம் நெருங்கவே, ஆசாரியன் அனுமதி பெற்றுநீரைமட்டும் ஆகாரமாக உட்கொண்டான் அம்பரீஷன். துருவாசர் வருகையை எதிர்பார்த்திருந்தான்.

நீராடித் திரும்பிய துர்வாசர் அரசன நீர் பருகியதை அறிந்தார் தம் யோக மகிமையினால். சினங்கொண்டு சபித்தார் தமது தவ மகிமையினால். ஒரு பிடியைப்பிடுங்கினார் தமது சடா முடியில்.

அதனின்று ஒரு பெண பேய் கிளம்பியது. நெருப்பைக் கக்கிக்கொண்டு அம்பரீஷனை நெருங்கியது. அவன் அஞ்சவில்லை. எம்பெருமானால் பக்தர்களைக் காப்பதற்காக அவனுக்கு முன்பே அளிக்கப்பட்டிருந்த சக்ராயுதம்கோபங்கொண்ட பாம்பைக் காட்டுத் தீ பொசுக்குவது போல் அந்தப் பேயைப் பொசுக்கி விட்டது.

பின்பு அச்சக்கரம் தன்னைநோக்கிப் பாய்வதையும் தன் முயற்சி வீணாவதையும் கண்டார் துர்வாசர். பயந்து தன் உயிரைக் காத்துக்கொள்ள நாற்புறமும ஓடினார். ஒளிந்தார் மலைக் குகைக்குள்; மறைந்தார் ஆகாயத்தில்; புகுந்தார் பாதாளத்தில்; விழுந்தார் கடலில்; விடவில்லை அந்த சக்ராயுதம்.

மும்மூர்த்திகளிடம் சரணடைந்தார். அவர்கள் காபபாற்றவில்லை. 'நல்ல குலப்பெண்கள் நல்ல நாயகனை வசப்படுத்துவது போல் அடைக்கலம் அடைந்த அடியார்கள் என்னிடம் கட்டுணட மனத்தினராய் என்னை வசப்படுததுகிறார்கள். நான் சுதந்திரமில்லாதவன; பக்தர்களுக்கு அடிமைப்பட்டவன். துர்வாசரே! உமக்கு விளைந்துள்ள இந்தக் கெடுதி எங்கிருந்துஉண்டாயிற்றோ அங்குச் சென்று அவரையே அடைக்கலம் அடைவீராக. சாதுக்களிடம் அடங்கியுள்ள வீரியம் இம்சிப்பவருக்கு அமங்களத்தை விளைவிக்கும்" என்றார் விஷ்ணு பகவான்.

துர்வாசர் அம்பரீஷனை அடைக்கலம் அடைய அவன் ஸ்தோத்திரத்தை ஏற்ற சுதர்ஸன சக்கரம் அவரைவிடுவித்தது. துர்வாசர் உள்ளத்திலேற்பட்ட அகவிருள் அம்பரீஷன் அகத்தில் அமர்ந்த 'பகர் அல்லைப் பகர் செய்' திருவேங்கடத்தானின் சக்ராயுதத்தால் விலக்கப்பட்டது.

பிறரோடு கலநது நலலுணர்வுகளுடன் பழகி மகிழ முடியாதவர்களுக்கு மிகப்பெரிய இந்த உலகத்தின பகற்பொழுதும்கூட இருட்டாகவே காணப்படும் என்பர் வள்ளுவர்.

'நகல் வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும் பாற பட்டன்று இருள்.

பாசமயக்கமாம் அகவிருளை அகற்றி நல்லுணர்வுகளை வளர்த்து ஆனமீக ஒளியையுண்டாக்கும் பகற்பொழுதினைக் காண சிந்தாமணிகள பகர் அல்லைப் பகல் செய்திருவேங்கடத்தானிடம் அடைக்கலமடைவோம். அவனுடைய திருவடிகளை விட்டு இமைப் பொழுதும் அகலாமல் கைங்கர்யத்தில் ஈடுபடுவோம்.

'சிந்தா மணிகள் பகரல்லைப்
பகல் செய் திருவேங்கடத்தானே,
அந்தோ! அடியேன் உன் பாதம்
அகல கில்லேன் இறையுமே'

—திருவாய்மொழி 6.10.9

# ஸ்ரீமத் பகவத் கீதையும் திருக்குறளும்





இறைவன் மனிதனுக்குக் கூறியது கீதை!

மனிதன் மனிதனுக்குக் கூறியது குறள்!

வட மதுரை நாயகன் கண்ணன் குருஷேத்திரத்தில் கூறியது பகவத் கீதை!

தென் தமிழ்ப் புலவன் வள்ளுவன் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றம் செய்தது திருக்குறள்.

ஆயிரம் ஆயிரம் ஸ்லோகங்களில் வேதங்கள், உபநிடதங்கள் கூறிய மிகப் பெரிய வேதாந்த ரகஸ்யங்களை ஒரு சில ஸ்லோகங்களில் கூறினான் கீதையில் கண்ணன்.

பல தமிழ் அறிஞர்கள் கூறிய அரும்பெரும் கருத்துக்களை இரண்டே அடிகளில் கூறிய பெருமை திருவள்ளுவரையே சாரும்.

கண்ணன் உலக இயல், ஞான இயல், விஞ்ஞான இயல், தியானம், கடமை, தர்மம், அதர்மம், குருதத்துவம், வாழ்க்கைத் தத்துவம் போன்ற பல தர்மங்களை 18 அத்தியாயங்களில் 700 ஸ்லோகங்களில் 3 காண்டங்களாகக் கூறி அருளினார் உலகம் உய்ய!

அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலில் 133 அதிகாரங்களில், 1330 குறட்பாக்களில் பற்பல தமிழ் அறிஞர்கள் கூறிய அரும்பெரும் கருத்துக்களை இரண்டே அடி குறட்பாக்களில் கொடுத்த பெருமை திருவள்ளுவரையேச் சாரும்.

கீதையின கருத்துக்கள் குறளிலும், வள்ளுவரின் கருத்துக்கள் கீதையிலும் மறைந்து கிடப்பதைப் படிப்பவர் யாவரும் அறிந்து இன்புறலாம்.

வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய
நவாநி க்ருஹ்ணாதி நரோ பராணி
ததா சரீராணி விஹாய ஜீர்ணாந்
யந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ
—கீதை 2-22.

குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு.
—குறள் 338.

ஒரு மனிதன் பிறந்தால் இறப்பது நிச்சயம். (ஞானமடைகின்ற வரை) இறந்தால் பிறப்பதும் நிச்சயம். அது எப்படியெனில், ஒருவன் நைந்து போன துணிகளைத் தள்ளிவிட்டு, புதுத்துணிகளை எப்படி எடுத்துக் கொள்வானோ அப்படியே முதுமையினால் சிதைந்து போன உடல்களை நீக்கிவிட்டுப் புதிய உடல்களை அடைகிறது ஆத்மா, என்கிறது கீதை. இக்கருத்தினையே திருக்குறளும், 'தான் இருந்த கூடானது தனித்துக் கிடக்கவும், பறவை பறந்து வெளியேறிப் போய்விட்டது போன்றதுதான் உடலோடு உயிருக்குள்ள தொடர்பு' என்கிறது.

"கர்மண்யேவாதிகாரஸ்தே மா
பலேஷு கதாசந"
—கீதை 2-47.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப் பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"
—குறள் 350.

கடமையைச் செய், பலனை எதிர்பாராதே-என்கிறான் கண்ணன். பற்றுக என்கிறார் வள்ளுவர். யாரைப் பற்ற வேண்டும் என்றால் பற்று அற்றான் (ஆசையில்லாதவன்) பற்றினைப் (ஞானத்தை) பற்ற வேண்டும். அப்பற்றை எதற்காகப் பற்ற வேண்டும் என்றால் பற்று விட்டுவிடுவதற்காகவாம்.

திரு. ஆர். மணிகண்டன்,
நங்கநல்லூர்.

உலகம் முழுவதும் பற்று இல்லாத கடமையையே விரும்புகிறது. மழை பொழிகிறது-பயனைப் பார்க்காது. சூரியன், சந்திரன், காற்று, நீர், நெருப்பு போன்ற இயற்கை சக்திகளும்; மரம், செடி, கொடி போன்ற தாவரங்களும்; நாய், காக்கை, பசு போன்ற மிருகங்களும் நன்றி, ஒற்றுமை, தயை போன்ற கடமையைப் பலன் இன்றிச் செய்கின்றன. அரிச்சந்திரன் உண்மை கூறினான். சிபிச் சக்ரவர்த்தி தன்னையே புறுவுக்குத் தந்தான். பாரி முல்லைக்குத் தேர் கொடுத்தான். புகழ் வரும் என்று அல்ல! "தங்கள் கடமை இது" என்று எண்ணியே!! அவர்கள் அனைவரும் தத்தம் கடமைகளை ஆற்றும்பொழுது பற்பல இன்னல்களை அனுபவித்தார்

கள். நாமும் மனைவி, மக்களுக்கு, தாய் தந்தைக்கு, நாட்டுக்கு, உலகுக்கு என்று கடமைகளைச் செய்ய வேண்டும்-பலன் இன்றி. அதுவே சிறந்த யாகம். இதையே பாரதியாரும்,

"ஊருக் குழைத்திடல் யோகம்; நலம்
ஓங்கிடுமாறு வருந்துதல் யாகம்"
என்பார்.

"யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோங்கா
நீவ ஸர்வச:
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்
தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா"
—கீதை 2-58.

ஆமை தன் அங்க அவயவங்களை உள்ளே இழுத்துக் கொள்வதுபோல் எவன் புலன்களை அவைகளின் விஷயங்களில்செல்லவிடாமல்நாற்புறமும் இழுத்துக் கொள்வானோ அத்தகையவனுடைய புத்தி ஒரு நிலையிலுள்ளதாகும்-இது கீதை வாசகம்.

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து"
—குறள் 126.

இந்தப் பிறவியில் ஒருவன், ஆமையைப்போல் ஐம்பொறிகளையும் அடக்கியாண்டால் அஃது அவனுடைய பல பிறவிகளைத் தடுக்கும் என்கிறார் வள்ளுவர் பெருமான்.

"யா நிசா ஸர்வபூதாநாம் தஸ்யாம்
ஜாகர்த்தி ஸம்யமீ
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸாநிசா
பச்யதோ முநே:"
—கீதை 2-69.

எல்லா ஜீவராசிகளுக்கும் எது இரவோ, அந்த இரவில் ஞானி விழித்திருப்பான். எந்த நேரத்தில் எல்லா ஜீவராசிகளும் விழித்திருக்குமோ அது ஆத்மாவைக் காணும் ஞானிக்கு இரவாகும்.

"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு"
—குறள் 338.

இறப்பு என்பது ஒருவனுக்கு உறக்கம் வருதலைப் போன்றதாகும்! பிறப்பு எனப்படுவதே உறக்கம் நீக்கி விழித்துக் கொள்வது போன்றதாகும்.

உறக்கத்தில் பல விளைவுகள் நேரும் அல்லவா? விழிப்பு பல நன்மைகளைத் தரும் அல்லவா?

"ஸர்வகர்மாணி மநஸா ஸந்யஸ்
யாஸ்தே ஸுகம் வசீ
நவத்வாரே புரே தேஹீ நைவ
குர்வந்ந காரயன்"
—கீதை 5-13.

புலன்களை வெற்றி கொண்டவன், சகல கருமங்களையும் மனத்தால் துறந்து, எதையும் செய்வதோ, செய்விப்பதோ இல்லாமல் ஒன்பது துவாரங்களைக் கொண்ட பட்டினமாகிய உடலில் சுகமாக இருப்பான்-என்கிறது கீதை. இதையே குறளும்,

"வேண்டின் உண்டாகத் துறக்க,
துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல"—குறள் 342.

என்கிறது. துன்பம் இல்லாத வாழ்வை விரும்பினால், ஆசைகளையெல்லாம் விட்டுவிட வேண்டும். அப்படி விட்டுவிட்டபின் இவ்வுலகில் அடையக் கூடிய இன்பங்கள் பலவாகும்.

"மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி
தநஞ்ஜய
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே
மணிகணா இவ"
—கீதை 7-7.

நூலில் கோர்க்கப்பட்ட மணிகள் போல் இவ்வுலகம் முழுவதும் என்னைப் பற்றிக் கொண்டு நிற்கிறது.

"அக்ஷ ராணாமகாரோஸ்மி......"
—கீதை 10-33.

எழுத்துக்களில் நானே அகரமாக இருக்கிறேன் என்கிறார் பகவான்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"—குறள் 1.

எழுத்துக்களெல்லாம் அகரத்தை அடிப்படையாகக் கொண்டு இருப்பதைப்போல் உலகம் முழுவதும் கடவுளை அடிப்படையாகக் கொண்டு இருக்கிறது. கீதையின் பொருளைத் தானே இத்திருக்குறளும் கூறுகிறது!

"தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு
ஸம்ஸார ஸாகராத்
பவாமி நசிராத் பார்த்த மய்யாவே
சிதசேதஸாம்"
—கீதை 12-7.

என்னிடமே மனத்தைப் புகுத்தியவர்களை, ஜனன மரணமாகிய ஸம்ஸாரக் கடலிலிருந்து உடனே கரை சேர்த்துவிடுவேன் என்கிறான் கண்ணன்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்"
—குறள் 10.

என்கிறார் வள்ளுவர்.

பிறவிப் பெருங்கடலை நீந்துவார்கள். அவர்கள் யார்? எப்படி நீந்துவார்கள்? என்றால், அன்பே படகாக யோகம் பக்தியே துடுப்புகளாக, கடமையே செயலாகக் கொண்டு ஸம்ஸாரக் கடலைக் கடந்து இறைவன் அடிகளாகிய சொர்க்கம் அடைவார்கள்! பிறவிப் பெருங்கடலைக் கடக்காதவர்கள் யாரெனில் பந்தம், பாசம், பற்று என்ற சுழு, முதலைகளிடம் சிக்கியும்; மனைவி, மக்கள், வீடு என்னும் புயலில் சிக்கித் தவித்தும்; காமம், குரோதம், லோபம், மதம், மாஸ்சரியம், அசூயை என்னும் கொடுமையான சுழல் காற்றுகளால் எழும் பெரிய அலைகளில் சிக்கித் துடித்தும்; பிறவிப் பெருங்கடலிலிருந்து விடுதலை அடையமுடியாமல் அதிலேயே மூழ்கிப் போகின்றவர்கள்-இவர்களே இறைவனடி சேராதவர்கள்.

"யஸ்மாந்நோத் விஜதே லோகோ
லோகாந்நோத் விஜதே ச ய:
..................ஸ ச மே ப்ரிய"
—கீதை 12-15.

எவனால் உலகம் தாபத்தை அடைவதில்லையோ, எவன் உலகத்தால் தாபமடைவதில்லையோ அவன் எனக்குப் பிரியமானவன் என்கிறார் பகவான்.

"எவ்வது உறைவது உலகம் உலகத்
தோடு
அவ்வது உறைவது அறிவு"
—குறள் 426.

உயர்ந்தோர் எவ்வாறு வாழ்கின்றார்களோ, அவ்வாறே அந்த உயர்ந்தவர்களோடு தானும் அங்ஙனமே வாழ்வதுதான் அறிவுடைமை ஆகும் என்கிறார் வள்ளுவர்.

"இந்த்ரியார்த்தேஷு வைராக்ய மநஸ்
கார ஏவ ச
ஜந்ம ம்ருத்யு ஜரா வ்யாதிதுக்க
தோஷா நுதர்சநம்"
—கீதை 13-8.

இந்திரியங்களுக்குரிய விஷயங்களில் பற்றில்லாமை (அகங்காரமில்லாமை, பிறப்பு, இறப்பு, மூப்பு, வியாதி, துக்கம் இவைகளில் தீமையைக் காணுதல்) ஞானம் ஆகும்.

"சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்
என்றைந்தின்
வகை தெரிவான்கட்டே உலகு"
—குறள் 27.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று கூறப்படுகின்ற இந்திரியங்களை ஆராய்ந்து அடக்கியவனை வல்லவன் (ஞானி) என்று கூறுகிறது உலகம்.

பஜகோவிந்தத்தில் ஆதிசங்கரர், ஐந்து இந்திரியங்களுக்கும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப்படும் ஐந்து விஷய சுகங்கள் இருப்பதைப்பற்றி மிக அழகாகக் கூறியிருக்கிறார்.

1. சுவை—தூண்டிலில் உள்ளதைச் சுவைக்க முயன்று மீன் மாய்கிறது.

2. ஒளி—தீயின் ஒளியை விரும்பி விட்டில் பூச்சி அழிகிறது.

3. ஊறு (மோகம்)—ஸ்பரிசத்தை நாடிய காட்டு யானை, அது பழகிய பெண் யானையின் மூலம் மக்களிடம் பிடிபடுகிறது.

4. ஓசை — ஓசையைக் கேட்டு மூச்சை அடக்கிய மான், வேடரிடம் அகப்பட்டுச் சாகிறது.

5. நாற்றம்(மணம்)—நறுமணத்தை நாடிய வண்டு மலரில் மாட்டிக் கொள்கிறது.

ஒவ்வொரு இந்திரியத்தினால் மட்டுமே இவ்விலங்குகள் அழிந்துவிடும் போது ஐந்து சுகங்களிலும் ஈடுபடும் மனிதனின் கதி என்னவாகும் என்பதை எண்ணிப் பார்த்து அவைகளிடம் பற்று வைக்காதிருக்க வேண்டும், அப்போதுதான் பிறவிப்பிணி தொடராது எனக் கூறுகிறது விவேகச் சூடாமணி.

"த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம்
நாசநமாத்மந:
காம: க்ரோதஸ்ததா லோபஸ்
தஸ்மாதே தத் த்ரயம் த்யஜேத்"
—கீதை 16-21.

"காமம், வெகுளி, மயக்கம் இவை
மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்"
—குறள் 360.

காமம், குரோதம், லோபம் இவை மூன்றும் நரகத்தின் மூன்று வாயில்கள். அவை ஆத்மாவுக்குப் பல்லாயிரம் பிறவிகள் தருபவை. ஆகவே இம்மூன்றையும் விலக்கிவிட வேண்டும் என்கிறது பகவத் கீதை. விருப்பு வெறுப்பு, அறியாமை ஆகிய இக்குற்றங்கள் மூன்றனுடைய நாமமும் கெடுமாறு நடந்தால், துன்பங்கள் வாராமல் கெடும் என்கிறது குறள்.

இம்மூன்றிலும் சினம் பொல்லாதது.

"தன்னைத்தான் காக்கின் சினம் காக்க
காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்"
—குறள் 305.

என்று சினத்தின் கேட்டைச் சிறப்பாகச் சொல்லுகிறார் வள்ளுவர்.

இராவணன் பெண் ஆசையினால் அழிந்தவன். துரியோதனன் மண் ஆசையினால் அழிந்தவன். இரண்யனும், கம்ஸனும் கோபத்தினால் மாண்டார்கள். அறியாமையால் மாண்டவன் பஸ்மாசுரன். கைகேயியிடம் கொடுத்த வரத்தினாலும், முனிவன் மகன்மீது விடுத்த அம்பினால் மகன் மாள, அதற்காக அம்முனிவன் கொடுத்த சாபத்தினாலும் மாண்டான் தசரதன். அவனுடைய அறியாமையே அவன் மரணத்திற்குக் காரணமாயிற்று.

"தாதவ்யமிதி யத்தாநம் தியதேநுப
காரிணே
தேசே காலே ச பாத்ரே ச தத்தாநம்
ஸாத்விகம் ஸ்ம்ருதம்"
—கீதை 17-20.

பலனை எதிர்பார்க்காமல், தனக்கு எவ்வித உபகாரமும் செய்யாதவனுக்கு, தேச கால பாத்திரங்களை அறிந்து கொடுப்பது ஸாத்விக தானம் எனப்படும் உயர்ந்தவகை தானமாகும்.

"பயன் தூக்கார் செய்த உதவி, நயன்
தூக்கின்
நன்மை கடலின் பெரிது"
—குறள் 103.

பயன் கிடைக்கும் என்று நினைக்காமல் ஒருவர் செய்த உதவியின் அன்புடைமையை ஆராய்ந்து பார்த்தால் அதன் பலன் கடலைவிட மிகப் பெரியதாகும்.

"யத்ததக்ரே விஷமிவ பரிணாமேம்ரு
தோபமம்
தத் ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்த
மாத்மபுத்தி ப்ரஸாதஜம்"
—கீதை 18-37.

"சுடச்சுடரும் பொன்போல ஒளிவிடும்
துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு"
—குறள் 267.

எது முதலில் விஷம் போலிருந்து முடிவில் அமிர்தத்திற்குச் சமமாக ஆகுமோ அது ஸாத்விக சுகமெனப்படும். அது தன் புத்தித் தெளிவினால் ஏற்படக்கூடியது என்கிறது கீதை. தங்கத்தைச் சுடச்சுட அதன் மதிப்பு அதிகரிப்பதுபோல் துன்பம் வரவர மெய்யுணர்வு தோன்றும் என்கிறார் வள்ளுவர்.

மன்மதன் ஏற்படுத்தும் காமம் நமக்குச் சுகம் தருவதுபோல் தோன்றும்! ஆனால் அதனால் பல பிறவிகள் தொடரும். எமன் என்றாலோ எல்லோருக்கும் பயம். 90 வயது கிழவருங்கூட மரணம் என்றால் வெறுக்கிறார். ஆனால் எமன் செய்வது நமக்கு நன்மையாகும். எப்படியெனில்,

"யம: ஸம்யமதாமஹம்"

—கீதை 10-29.

உயிர்களைத் தண்டித்து அடக்குபவர்களில் நானே யமனாக இருக்கிறேன் என்கிறார் பகவான். தவறு செய்த சிறுவனை ஆசிரியர் தண்டிப்பது எதற்கு? அவன் திருந்த. அதே போல் எமன் உயிர்களைத் தண்டிப்பது எதற்கென்றால் ஒவ்வொருவரும் அடுத்த பிறவியிலாவது திருந்தவே யாகும். ஆகவே, எமனது தண்டனை முதலில் விஷமாக இருந்தாலும் அதுவே முடிவில் அமிர்தமாக இனிக்கும்.

மகாபாரதத்தின் இறுதியில், குந்தி தேவி கண்ணனிடம் ஒரு விந்தை வரம் கேட்டாள். அந்த வரம் சொர்க்கம், சுகம், நிலம், வீடு போன்றவைகளல்ல. நாமாக இருந்தால் அப்படித்தான் கேட்போம். ஆனால் குந்தி கேட்ட வரம், "கண்ணா, எனக்கு என்றும் துன்பமே கொடு" என்பதாம். காரணம் துன்பம் வரும் போதெல்லாம் கண்ணனின் இன்ப நினைவு வரும் என்பதால்தான். இதனையே வள்ளுவரும்,

"இடுக்கண் வருங்கால் நகுக, அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்"

—குறள் 621.

என்கிறார். துன்பம் வரும் நேரத்தில் சிரித்தால்தான், அத்துன்பத்தைத் தாங்கி அதனை வெற்றி அடைகின்ற சுகமும் கிடைக்கும். இரவுக்குப்பின் பகல்; இருளுக்குப்பின் ஒளி; துன்பத்திற்குப் பின் இன்பம்; புயலுக்குப் பின் அமைதி!

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம்
சரணம் வ்ரஜ
அஹம்'த்வா ஸர்வபாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச"

—கீதை 18-66.

எல்லாத் தர்மங்களையும் விட்டு, என்னை ஒருவனையே சரணமாக அடைவாயாக! நான் உன்னை சகல பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன், வருத்தப்படாதே-என்கிறார் பகவான் கிருஷ்ணன். இதனையே வள்ளுவரும்

"வேண்டுதல் வேண்டாமை இலானடி
சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல"

—குறள் 4.

என்கிறார்.

வேண்டுதல் என்னும் இன்பங்கள், வேண்டாமை என்னும் துன்பங்கள் இல்லாத இறைவனைச் சரண் அடைந்தார்க்கு என்றும் பிறவி என்ற துன்பமில்லை. செய்த தவறுகளைச் சுட்டிக் காட்டுகிறவன் மனிதன்; செய்த தவறுகளை மன்னிக்கத் தெரிந்தவன் ஞானி; செய்த தவறுகளை மறந்துவிடுகின்றவன் இறைவன்! அருணகிரிநாதர், வான்மீகி, யோகி வேமன்னா, அஜாமீளன் போன்றவர்கள் சொல்ல முடியாத பாவங்களைச் செய்தவர்கள். அவர்கள் தங்கள் தவறுகளை உணர்ந்தும் உணராமலும் இறைவன் திருவடிகளைச் சரணடைந்து பிறவித்தளைகளிலிருந்து விடுபட்டார்கள். புண்ணியம் அதிகம் செய்தால் புனிதமான பிறவியும், பாவம் அதிகமாக செய்தால் கீழ்மையான பிறப்பும் கிடைக்கும். ஆனால் இறைவனே சரண் என்று அடைந்துவிட்டால், அதன்பின் பிறவிகளே இல்லை! ஆகவே, இறைவனைச் சரணடைந்து பிறவித் தளைகளிலிருந்து விடுபடுவோமாக!

★

## வழிபாடு இராமனுக்கு அல்ல; இலக்குமணனுக்கு!

வங்காளம், அஸ்ஸாம், மணிப்பூர் மாநிலங்களில் இராம வழிபாட்டிலும் இலக்குமண வழிபாடே செல்வாக்கு பெற்றுள்ளது. இராமனினும் இலக்குமணனே செயலாற்றலின் சின்னமாகக் கருதப்படுகிறான். இதன் காரணமாக இலக்குமண வழிபாடு இங்கு மேலோங்கி விளங்குகிறது.

## அஸ்ஸாமில் ஒரு அணில் கதை

அஸ்ஸாமிலும் மணிப்பூரிலும் அணிலைப் பற்றி ஒரு கதை வழங்கி வருகிறது. அது தமிழ் நாட்டில் வழங்கும் மரபு வழிக்கதையில் மாறுபட்டுள்ளது. சிங்களத் தீவிற்கு ஒரு பாலம் அமைக்க இராமனுக்கு உதவத் துடிதுடித்த சின்னஞ்சிறு அணில் மூன்று மூங்கில் இலைகளைத்தான் தெப்பமாகத் தந்து உதவ முடிந்தது. ஆயினும் அணிலின் ஆர்வத்தைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்த இராமனின் மூன்று விரல்கள் பட்ட இடம்தான் அணில் இனத்தையே இன்றும் நாம் அடையாளம் காண உதவுகிறது. "உதவி செய்யப் பட்டார் சால்பின் வரைத்து" என்பது திருக்குறள். மேலும் இராமன் அணில் இனம் எந்தக் காலத்திலும் மரக் கிளைகளைப் பற்றினால்-தொற்றினால்-விழாமல் இருக்கவும் வரம் வழங்கினாராம்.

—டாக்டர். ந. சஞ்சீவி.

தகவல்: ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

# 1990-இல் உங்கள் இராசி பலன்

[இந்த ராசி பலன்களை நாம நட்சத்திரம் அல்லது ஜன்ம நட்சத்திரம் கொண்டு பார்க்க வேண்டும். இங்கிலீஷ் தேதி மட்டும் தெரிந்தவர்கள் அந்தத் தேதிகளுக்கு எழுதிய ராசி பலன்களைப் பார்க்கலாம். ஜன்ம ஜாதகத்திற்கேற்ப தசை, புக்தி ஆகியவற்றை அநுசரித்து இப்பலன்கள் சற்றுக் கூடக்குறைய இருக்கலாம்.]

## மேஷம்

(அஸ்வினி, பரணி, கார்த்திகை 1-ஆம் பாதம்: ஏப்ரல் 14-மே 15).

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு கிரகங்களின் அநுகூலம் பெருமளவிற்குத் துணைபுரியும். ஏப்ரல் மாதம் வரை செலவு அதிகமாயிருந்த போதிலும் பண வருமானத்திற்குக் குறைவு இராது. கௌரவம், ஆதரவு நன்றாயிருக்கும். மாணவர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், வங்கி மற்றும் இன்ஷ்யூரன்ஸ் அலுவலர்கள், வட்டி வியாபாரிகள் ஆகியோர் நற்பலன் பெறுவர். யாத்திரை, தொழில் நிமித்தமான பிரயாணங்கள், அரசியல் அலுவல்கள் இலாபம் தரும். ஜூன் மாதத்தில் தொழில் காரணமாகச் சிறிது இடையூறு மற்றும் மன உளைச்சல் இருந்தாலும், கடைசியில் அது நல்லபடியாகவே மாறும். அதன் பின்னர் ஆண்டு இறுதி வரை இராசியதிபதி சஞ்சாரம் காரணமாகக் குடும்பத்தில் உடல்நலமின்மை, திடீர் கலகங்கள், விபத்துகள் தென்படுகின்றன. ஆயினும், பணவரவு, ஸ்திர ஆஸ்தி சேர்க்கை, லேவாதேவியில் வெற்றி ஆகியவற்றுக்கு உதவுவதாயுள்ளது. இவ்வாண்டில் நிகழும் கிரகணங்கள் இந்த இராசிக்காரர்களுக்கு குடும்ப விவகாரங்களிலும் சரி, தொழிலிலும் சரி அநுகூலமின்மையினையே குறிப்பிடுகின்றன. சனி சஞ்சாரம் மற்றும் இராகு கேதுக்கள் சஞ்சாரம் குடும்பத்தினரின் உடல் நலம் சரியாக இருப்பதற்கு உதவிகரமாய் இராது. பெற்றோரின் உடல் நலத்தில் கவனம் தேவை. இவ்வாண்டில் யாத்திரைகள், பயணங்கள் அதிகமாயிருக்கும். அவற்றின் காரணமாக இலாபம்கூட அடையலாம். ஜூலைக்குப் பின்னர், குரு சஞ்சாரம், வீட்டிலும் சரி உறவினர்களின் வீட்டிலும் சரி சுப காரியங்கள், அவை மூலம் செலவு, பிரயாணங்கள் ஆகியவற்றைக் குறிக்கின்றது. பொதுவாக, இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு சுபம் அதிகமாயுள்ள (கெடுதல் குறைவாயுள்ள) பலன் எனச் சொல்லலாம்.

## ரிஷபம்

(கார்த்திகை 2, 3, 4ஆம் பாதங்கள், ரோகிணி, மிருக சீர்ஷம் 1, 2 பாதங்கள்: மே 15-ஜூன் 15).

இந்த இராசிக்காரர்களுக்கு ஜூலை வரை குரு சஞ்சாரம் நல்ல யோக காலம். தனம், கௌரவம், கல்வி முதலியவை நன்றாயிருக்கும். எனினும் ஆண்டில் அதிககாலம் சனி சஞ்சாரம் அநுகூலமில்லாமல் உள்ளது; நினைக்காத கஷ்டங்கள், வீட்டில் உடல்நலமின்மை, சச்சரவுகள், வரவுக்கு மிஞ்சிய செலவு ஆகியவை ஏற்படும். இராகு கேதுக்கள் சஞ்சாரம் புண்ணிய க்ஷேத்திர தரிசனம், புதிய வியாபார முயற்சிகள், அதன் மூலம் இலாபம் ஆகியவற்றைக் குறிக்கிறது. இடையிடையில் கலகங்கள், விவகாரங்களில் பேச்சுத் தடிப்பு ஆகியவைகூட ஏற்படும். இவ்வாண்டில் இந்த இராசி மாணவர்கள், வேளாண்மை செய்வோர், கலைஞர்கள் ஆகியோருக்குச் சிறிதளவு அநுகூலமில்லாத நிலை ஏற்படும். கடன்கள் ஏற்பட்டாலும் அதன்மூலம் வரவும் இருக்கும். அரசியலில் இருப்பவர்கள், நிறுவனங்களில் வேலை பார்ப்பவர்கள், நீதி மன்றம், அரசு அலுவலகம் ஆகியவற்றில் உள்ள உத்தியோகஸ்தர்கள், அதிகாரிகள் இவ்வாண்டில் நல்ல முன்னேற்றம் பெற்று, எல்லா வகையிலும் யோக காலம் பெற்று விளங்குவர். ஆண்டின் இரண்டாவது பாதியில், இந்த இராசிக்காரர்களுக்கு அவர்கள் வீட்டிலும் சரி அவர்களுக்கும் சரி உடல் நலமின்மை முதலிய இடர்கள், நினைக்காத கஷ்டங்கள், செலவு ஆகியவை உண்டாகும். சுப காரியங்கள் சேர்ந்து வராது. வரவுக்கு மீறிய செலவு காணப்படுகிறது. கிருத்திகை, ரோகிணி நட்சத்திர ஜாதகர்களை விட மிருக சீரிஷ நட்சத்திரக்காரர்களுக்கு அதிக நற்பலிதங்கள், யோக அநுகூலம் ஏற்படும்.

## மிதுனம்

(மிருக சீர்ஷம் 3, 4 பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 பாதங்கள் ஜூன் 15-ஜூலை 15.)

இவ்வாண்டு இந்த இராசிக்காரர்களுக்கு குரு பலம் மிகுதியாக இருப்பதனுல், தன வரவு, சுப காரியாநுகூலம், கௌரவம், ஆதரவு எல்லாம் நிறையவே இருக்கும். மாணவர்களுக்கு நல்ல காலம். நீதி மன்றம், அரசாங்க அலுவலகம் ஆகியவற்றில் வேலைபார்ப்பவர்கள், இன்ஷ்யூரன்ஸ், இரயில்வே, தந்தி, தபால் முதலிய நிறுவனங்களில் பணிபுரிவோர், சுரங்கம், தொழிற்சாலை ஆகியவற்றில் வேலை செய்பவர்கள் நற்பலன்கள், பணவரவு, சத்ருக்களின் மீது வெற்றி,

கௌரவம், ஆதரவு பெறுவர். அதிகார பதவிகளில் இருப்பவர்கள் உயர் வினை எதிர்பார்க்கலாம். ஸ்திர ஆஸ்தி சேர்க்கை, குழந்தைகள்மூலம் சுப சந்தோஷம் ஏற்படும். இந்த இராசிக்காரர்களுக்கு சனி சஞ்சாரத்தினுல் களத்திர உடல்நலமின்மை, கோர்ட்டு கச்சேரி விவகாரங்களில் தகராறுகள், நஷ்டங்கள் உண்டாகும் அறிகுறிகள் உள்ளன. ஆகஸ்ட் மாதத்திலிருந்து குஜ சஞ்சாரமும் அநுகூலமில்லாமல் இருக்கிறது. உடல்நலமின்மை, எதிர்பாராத செலவு, கலகம், பிரயாணத்தில் விபத்து போன்ற தீய பலன்கள் உண்டாகும் வாய்ப்பு உள்ளது. ஆண்டு முடிவில் இடர்கள் விலகி கொஞ்சம் மேன்மை ஏற்படும். பொதுவாக, இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு மூன்றில் இரண்டு பங்கு நன்மை தருவதாகும்.

## கடகம்

(புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்: ஜூலை 16-ஆகஸ்ட் 15).

இந்த இராசிக்காரர்களுக்கு குரு சஞ்சாரத்தின் பலத்தினுல் பெருமளவிற்கு எதிர்பாராத வகையில் பண வரவு, சுப காரியங்கள் நிகழுதல், ஸ்திர ஆஸ்தி சேர்க்கை, தொழில் மற்றும் உத்தியோகத்தில் முன்னேற்றமும் அபிவிருத்தியும் காணப்படுகின்றன. ஆனுல், ஆண்டின் இரண்டாவது பகுதியில் பாப கிரகங்களின் சஞ்சாரம் பலவகைத் தடங்கல்கள், கலகங்கள், நஷ்டம், உடல்நலமின்மை ஏற்படுவதாக அமைந்துள்ளது. கோர்ட்டுவிவகாரங்கள் இலாபமளிப்பதாயில்லை. சுயேச்சையான தொழில், உத்யோகத்தில் இடர்கள் அதிகம். அரசியலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு மட்டும் சிறிதளவு கூநுகூலமான காலம். கல்யாணத்திற்கு இருக்கும் இளைஞர்கள், யுவதிகள ஆகியோருக்கு அநுகூலமான சம்பந்தங்கள் கிடைக்கும். தங்கம், வெள்ளி சினிமா வர்த்தகர்களுக்கும் அந்த ஸ்தாபனங்களில் பணி புரிபவர்களுக்கும் இவ்வாண்டு நல்ல யோக காலம். இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு பயணங்கள் அடிக்கடி ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு மாற்றல், இட மாற்றம், அதனுல் உண்டாகும் அலைச்சல் இருக்கும். கலகம, கோபதாபங்கள் ஆகியவற்றைக் குறைத்துக் கொள்வது நல்லது. பூச நட்சத்திரக்காரர் களுக்கு ஏனைய நட்சத்திரக்காரர்களை விட மிகுதியான அநுகூலமான பலன்கள் உண்டாகும்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் 1-ஆம் பாதம்: ஆகஸ்ட் 16-செப்டம்பர் 15.)

இவ்வாண்டு இந்த இராசிக்காரர்களுக்கு நல்ல யோக காலம், எல்லாத் துறைகளிலும் நற்பலிதங்கள் ஏற்படும். தொழில், உத்தியோகம் ஆகியவற்றில் நல்ல உயர்வு, பண இலாபம், கௌரவம், ஆதரவு, வெற்றி சந்தோஷம் உண்டாகும். புதிய அலுவல்கள் உற்சாகத்துடன் நடைபெறும். ஆகஸ்ட், அக்டோபர், ஜனவரி, மார்ச் மாதங்களில் வீட்டிலும் சரி தனக்கும் சரி, சிறிது உடல்நலமின்மை காரணமாக சிக்கல்கள் மற்றும் கவலை, எதிர்பாராத செலவினங்கள், குழப்பம், ஏற்படலாம். இடமாற்றம், பிரயாணத்தில் செலவு முதலியன திடீரென உண்டாகலாம். இருப்பினும் ஆண்டின் முதற்பகுதியில் எல்லா அநுகூல பலன்களும் ஏற்பட்டு, அதன் பின்னர் உண்டாகக்கூடிய அநுகூலமின்மை, அத்தனை குறிப்பிடத்தக்கதாக இராது. மகம், பூரம் நட்சத்திரக்காரர் நற்பலிதங்களை அடைவர். மாணவர்களுக்கு வெற்றி ஏற்படும். அரசியல் தலைவர்கள் நல்ல கௌரவம் ஆதரவு பெறுவதோடுகூட வருமான வகையிலும் அபிவிருத்தி அடைவர். வார்த்தைக்கு மதிப்பு, ஸ்திர ஆஸ்தி சேர்க்கை போன்ற நற்பலிதங்கள் தென்படும். உத்திர நட்சத்திரக்காரர்களுககு ஆண்டின் இரண்டாவது பகுதியில் நல்லகாலம் உண்டாகும்.

## கன்னி

(உத்திரம் 2, 3, 4 பாதங்கள், ஹஸ்தம், சித்திரை, 1, 2 பாதங்கள்: செப்டம்பர் 16—அக்டோபர் 15.)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டில் நடுப்பகுதி சற்று அநுகூலமாக இருக்கும. குரு சஞ்சாரம் நன்ருயிருந்தாலும், சனி சஞ்சாரம் ராகு சஞ்சாரம் அநுகூலமாக இல்லை. அதன் காரணமாக இவர்களுக்கு இவ்வாண்டு பெருமளவு இடையூறுகள், கஷ்ட நஷ்டங்கள், உடல்நலமின்மை, பயம், குழப்பம், பணச் சிரமங்கள் தென்படும். ஆகஸ்ட், நவம்பர், டிஸம்பர் மாதங்கள் ஓரளவிற்கு அநுகூலமாகத் தென்படுகிறது. ஹஸ்த நட்சத்திரக்காரர்களுக்கு நல்லகாலம். இவர்களுக்கு எல்லாத் துறைகளிலும் நற்பலிதங்கள் உண்டாகும. நிறுவனங்களில் பணிபுரிவோர்க்கு நல்ல வருமானம் உண்டாகும். வேளாண்மையில் ஈடுபட்டிருப்போர்க்கு நல்ல விளைச்சல் ஏற்பட்டு இலாபம் கிடைக்கும். வழக்கறிஞர்கள், எஞ்சினியர்கள், வைத்தியர்கள், சினிமா வியாபாரிகள், முனிசிபாலிட்டி, இரயில்வே, கோர்ட்டு கச்சேரியில் வேலை செய்வோர் நிறைய வருமானம், முன்னேற்றம், கௌரவம், ஆதரவு அடைவர். கோபதாபங்கள், அகங்காரம், பிடிவாதம் ஆகியவற்றை விட்டுவிட வேண்டிய காலம். இல்லாவிட்டால் பலவகை இன்னல்களை எதிர்கொள்ள நேரும்.

## துலாம்

(சித்திரை 3, 4 பாதங்கள், ஸ்வாதி, விசாகம் 1, 2, 3 பாதங்கள்: அக்டோபர் 16—நவம்பர் 15.)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு கிரகங்களின் அநுகூலம் நிறையவே உள்ளது. எல்லாத்துறைகளிலும் இவர்கள் வெற்றி, இலாபம் சுகம், மகிழ்ச்சி பெறுவர். தொழில் வியாபாரம், வேளாண்மை எல்லாவற்றிலும் இலாபமே காணப்படுகிறது.

புண்ணிய க்ஷேத்திர தரிசனம், உற வினர்கள், நண்பர்கள் வருகை, கட் டடப் பணியில் நிறைவு தென்படுகின் றன. பெரியோரின் அருள், சிறியோ ரின் உதவி கிடைக்கும். சனியின் சஞ்சாரம் அவ்வளவாகப் பாதிக் காது. ஆண்டின் இரண்டாவது பகுதி யில் குஜ ஸ்தம்பன யோகம் அஷ்டம இராசியில் ஏற்படுவதால், உடல்நல நோக்கில், அவ்வப்போது எதிர் பாராத கவலைகள் உண்டாகக்கூடும். குரு, சுக்ரன் சஞ்சாரம், இதய நோய்கள் உள்ளவர்களுக்குக் கொஞ்சம் அதிகமாகத் துன்பப்படுத் தும். ஆனால், பொதுவாக கிரக பலம் நன்றாயிருப்பதனால் இவ்இடர் கள் யாவும் நிலையாக இரா. எதிரி கள் அடங்கிநடப்பார்கள். கோர்ட்டு கச்சேரி, விவகாரங்கள் அநுகூலமாக நடைபெறும். ஜூன், ஜூலை மாதங் களில் வீட்டிலும் தனக்கும் ஆரோக் கியம், பணவசதி சௌகரியம் நன் றாக இருக்கும். சுவாதி நட்சத்திரக் காரர்களுக்கு ஏனைய நட்சத்திரக் காரர்களை விட நல்ல யோக காலம்.

## விருச்சிகம்

(விசாகம் 4-ஆம் பாதம், அனுஷம், கேட்டை, நக்ஷத்திரம்: நவம்பர் 15—டிசம்பர் 15.)

இந்த இராசிக்காரர்களுக்கு மார்ச் மாதம் ஏழரை ஆண்டுச் சனிதோஷம் விலகிப் போய்விடும். ஆயினும், மீண்டும் வக்கிர சனி ஜூலை மாதத் திலிருந்து இரண்டாம் இடத்தில் சஞ்சரிப்பதால், இராசியதிபதி ஏழாம் இடத்தில் நிலையாக இருப்பதனால் இந்த இராசிக்காரர்களுக்கு பிரயா ணங்கள், செலவுகள், எதிர்பாராத வேலைதேவிகள், களத்திர குடும்பப் பீடைகள், எதிரிகள் அதிகமாவது போன்ற அநுகூலமில்லாத பலன்கள் ஏற்படும். ஆனால், குரு சஞ்சாரத் தினால் ஓரளவிற்கு இவ்விடர்களை அகற்றக்கூடும். ராகுவின் மூலம் எதிரிகள் அடங்கியிருப்பார்கள். மாணவர்களுக்கு அவ்வளவாக யோக காலம் இல்லை. உத்தியோகஸ்தர் வேளாண்மை செய்பவர்களுக்கு சாமானியப் பலன். வியாபாரிகளுக்கு ஏதோ ஒரு வகையில் தினவருமானம் காணப்பட்டாலும் பெருமளவில் திருப்தி ஏற்படாது. புதிய வியாபாரங்கள் தொடங்குவது கஷ்டம். துணி வியாபாரிகள், அரசி யல் தலைவர்கள், சிமெண்டு, மரம், பிராந்தி வர்த்தகம் செய்வோர் கொஞ்சத்திற்குக் கொஞ்சம் நற்பலி தங்கள் பெறுவர், உண்மையானவர் கள் நல்ல பயன்களை அடைவர். அநுஷ நட்சத்திரக்காரர்களுக்கு நல்ல காலம். கேட்டை நட்சத்திரக்காரர் களுக்கும் நல்லதும் கெட்டதும் கலந்த பலன்கள். டிஸம்பர் மாதத் திற்குப் பிறகு அதாவது, அடுத்த ஆண்டின் தொடக்கத்தில் இடையூறு கள் விலகி நல்லகாலம் வரும்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம், 1-ஆம் பாதம்: டிசம்பர் 15—ஜனவரி 15.)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ் வாண்டு ஏழரை ஆண்டுச் சனி இரண் டாவது வீட்டில் ஆரம்பமாகிறது. ஆனால் ஜன்ம ஸ்தானத்தை விட்டா லும், அங்கேயே சனி மீண்டும் வக் ரித்து இருப்பதால் செலவு, உடல்நல மின்மை, அலைச்சல், கண்பாதிப்புகள், பிரயாணங்கள் விவகாரங்களில் பேச்சுத் தடிப்பு ஏற்பட்டாலும், அவை மிகுதியாகப் பாதிக்காது. பூராட நட்சத்திரக்காரர்களுக்கு ஏனையோரை விட இடைஞ்சல்கள் குறைவு. எது எப்படி இருந்தாலும் பிற கிரகங்களின் சஞ்சாரம், சனியின் பாதக விளைவுகளைச் சற்று மட்டுப் படுத்தும் போக்கு இருக்கும். கலகங் கள் கருத்து வேற்றுமைகள் இருந்தா லும் வெற்றி, இலாபம் ஆகியவற்றுக் குக் குறைவு இராது. மன அமைதி குறைந்தாலும் மரியாதைக்குக் கெடுதி நேராது. வருமானம் நன்றாக இருப்பதனால் செலவு அவ்வளவாகப் பாதிக்காது. ஜூன், ஜூலை மாதங் களுக்குப் பின்னர் எல்லா வகையிலும் நற்பலிதங்கள் ஏற்பட்டு சுகம், சாந்தி வியாபாரத்தில் இலாபம் கிடைக்கும். ஆண்டின் கடைசிப் பகுதியில் உடல் நலமின்மை, காரியங்களில் தடங்கல் மிகுதியான செலவு முதலிய வேண் டாத பலன்கள் தென்படுகின்றன. ஆனால், இறுதியில் எல்லாம் நல்லபடி யாகத் தீர்ந்து மன உறுதியையும் புதிய உற்சாகத்தையும் ஏற்படுத்தும். ஆண்டின் தொடக்கத்தில் கட்டட வேலைகளுக்கு அநுகூலமான காலம். பொதுவில் இந்த இராசிகாரர்களுக்கு இவ்வாண்டு நல்லதும் கெட்டதும் கலந்த பலன்களைச் சொல்லவேண்டும்.

## மகரம்

(உத்திராடம் 2,3,4, பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 பாதங்கள்: ஜனவரி 15—பிப்ரவரி 15).

இந்த இராசிக்காரர்களுக்கு இவ் வாண்டு சனி, குரு சஞ்சாரம் காரண மாக துன்பம் உண்டாவதாகவே இருக்கிறது. ராகு சஞ்சாரம் மற்றும் குரு சஞ்சாரம் அதற்குத் தகுந்தாற் போலவே இருப்பதால், இவர்களுக்கு இவ்வாண்டு கடினமானதாகவே இருக் கும் என்றே சொல்ல வேண்டும். ஆயினும், குரு பலத்தினால் கௌர வம், ஆதரவு, வழக்கமான வரு மானம் இவற்றுக்குக் குறைவு ஏற் படாது. ஆண்டின் இரண்டாவது பகுதியில் சிறிதளவு நல்ல பலன்கள் ஏற்படுவதாயுள்ளது. மே, ஜூன், ஜூலை மாதங்களில் சுகம், மன அமைதி, எல்லாவற்றிலும் அபி விருத்தி, விவகாரங்களில் வெற்றி, காரியங்கள் செய்வதில் மன நிறைவு ஆகியவை ஏற்பட்டு, ஊக்கம் ஏற் படும். ஜனவரிக்குப் பிறகு எல்லா வற்றிலும் எல்லா வகையிலும் தடங் கல் மயமாகத் தெரிகிறது. உடல்நல மின்மை, உறவினர் பகை, பணக் குறைவு போன்ற கெட்ட பலன்கள் கூட ஏற்படக்கூடும். அவிட்ட நட் சத்திரக்காரர்களுக்கு ஏனையோரை விட எல்லாவகையில் நல்ல காலம். இந்த இராசிக்காரர்கள் சனி, ராகு கிரகங்களுக்கு ஜபம், தானம் முத லியவை செய்விப்பது நல்லது.

## சந்தாதாரர்களுக்கு...

28-2-90—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

9 13 27 41 42 83 84 144 168 169 171 212 232 371 500 502 509 510 611 616 619 697 867 1142 1146 1146 (A) 1147 1150 1151 1154 1173 1174 1179 1180 1195 1214 1218 1219 1242 1249 1253 1257 1310 1316 2260 2571 2579 2581 2586 2592 2598 2601 2605 2612 2616 2619 2638 2642 2647 2697 2853 3136 3309 3785 3788 3794 முதல் 3798 3802 3803 3804 3806 3809 3811 3812 3813 3815 3818 3822 3824 3825 3826 3832 3834 3837 3843 3845 3848 3849 3853 3855 3857 3864 3865 3867 3870 3881 3882 3883 3885 3888 3891 3893 3896 3900 3902 3904 3906 3907 3908 3912 3914 3916 3918 3919 3920 3922 4628 4630 5210 5211 5212 முதல் 5224 5227 5228 5229 5230 5234 முதல் 5238 5241 முதல் 5247 5249 முதல் 5269 5272 முதல் 5278 5280 முதல் 5317 5319 முதல் 5253 5255 முதல் 5359 5361 முதல் 5384 5479 5513 5554

### கும்பம்

(அவிட்டம் 3, 4 பாதங்கள், சதையம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்: பிப்ரவரி 13—மார்ச் 15.)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு சனி சஞ்சாரம் இலாபமளிப்பதாய் இருக்கும். குரு சஞ்சாரம் கூட ஜூலை வரை சுபம் தருவதாகவே அமையும். எனவே, இவர்களுக்கு இவ்வாண்டு புதிய காரியங்களில் வெற்றி, பணவரவு, உத்தியோகம், தொழில் ஆகியவற்றில் முன்னேற்றம், உயர்வு போன்ற நற்பலிதங்கள் உண்டாகும். வழக்கறிஞர்கள், எஞ்சினியர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள் முதலியவர்களுக்கு சுபம் ஏற்படும். வீட்டில் சுபகாரியங்கள் நடைபெறும். வ்யாபார விருத்தி, குடும்ப விருத்திகூட ஏற்படும். உடல் நலம், கௌரவம், மரியாதை நல்ல முறையில் இருக்கும். ஜூன், ஜூலை, ஆகஸ்ட் மாதங்கள் நிரம்பவும் வெற்றியுடன் இருக்கும். ஆகஸ்டிலிருந்து குஜ சஞ்சாரம்கூட எதிரி விவகாரம், ஸ்திர ஆஸ்தி, லேவாதேவி, கட்டட அலுவல்கள் ஆகியவற்றில் தொடர்ந்து இலாபமளிப்பதாய் இருக்கும். சதயம் நட்சத்திரக்காரர்களுக்குப் பிறரைவிட யோக காலம் வரும். ஜனவரிக்குப் பின்னர், ஏழரை ஆண்டுச் சனி கணக்கிற்கு வருகிறது. இருந்தாலும், இராசியின் அதிபதியாதலால், சனியினால் அதிகமாகப் பாதகங்கள் ஏற்படாது. பொதுவாக, இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு நற்பலிதங்கள் அளிக்கும். நல்ல யோகமான காலம் என்று சொல்லலாம்.

### மீனம்

(பூரட்டாதி 4-ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி: மார்ச் 15—ஏப்ரல் 15.)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு குரு சஞ்சாரம் பெரிதும் இலாபமளிக்கும். சனி சஞ்சாரம்கூட ஓரளவிற்குமேல். ராகு யோகமளிப்பவன். எனவே, இந்த இராசிக்காரர்களுக்கு இந்த ஆண்டு யோக காலமாகவே அமையும். அனைத்துத் துறையிலுள்ளோருக்கும் அநுகூலமான காலம். ஜூலை மாதத்திற்குப் பிறகு, நற்பலிதங்கள் அதிகமாக ஏற்படும். ஏப்ரல், மே மாதங்களில் தொழில், வியாபாரம் ஆகியவற்றிலும், குடும்ப விவகாரங்களிலும், ஆரோக்கிய விஷயத்திலும் சில எதிர்பாராத சிக்கல்கள், செலவு, உழைப்பு ஆகியவை தோன்றினாலும், அவை யாவும் அதன் பிறகு சரியாகிவிடும். வரும் ஜனவரியிலிருந்து எல்லா வகையிலும் நல்ல காலம். பண வரவு, சுப காரியங்கள், கட்டட வேலைகள், பேரும் புகழும் பெருகுதல், உறவினர்கள் நண்பர்கள் ஆகியோருடன் நல்ல உறவுகள், எல்லா வகையான சுகம், சாந்தி ஏற்படுவதாக இருக்கும். பழைய பாக்கிகள் வசூலாகும். புதிதாக நஷ்டம் ஏற்படாது. பொதுவாக இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு சுப யோகத்துடன் கூடியதாக அமையும்.

---

டாக்டர் எம். சங்கமேஸம்
தமிழாக்கம் : மீனம்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

